உ

ஓம் சற்குருவே நம:

# கைவல்ய நவநீதம்.

## மூலமும் உரையும்.

இம்மூலஞ்செய்தவர்

நாராயணதேசிகர் மாணாக்கராகிய

தாண்டவராயமூர்த்திசுவாமிகள்

இவ்வுரை செய்தவர்

திருத்துருத்தி காபாத்திரசுவாமிகள் பரம்பரைக்குரிய

நாகப்பட்டணம்

அருணாசலசுவாமிகள்

பதிப்பித்தபிரதிக்கிணங்க,

மதுரை புதுமண்டபம் புஸ்தகஷாப்.

P. N. C. கடைகாரியம்,

N. குருசாமிநாயுடு அவர்களால்

பிடாரித்தாங்கல்,

நாராயணசாமிமுதலியார் குமாரர்

சிதம்பரமுதலியாரவர்களது

சென்னை

வித்தியாரத்நாகரஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1905.

சென்னை பிரம்பூர் குயப்பேட்டை 65-வது, நெம்பர்வீடு.

உரைச்சிறப்புப்பாயிரம்.

யொருமொழியமுதையுள்ளூறவூட்டி
நிருவிகற்பாங்கநிட்டையினிறீஇ
யிருசொரூபானுபூதியைவிலக்கிச்
சுகசானந்தத்தலைமீக்கொண்டு
சும்மாவிருக்கச்சுகமெனவருளிய
வெம்மானெழினுற்றிலங்கும்பிறைதை
அருணாசலச்சுவாமிகளெனத்
திருநாமம்பெறுந்தேசிகோத்தமனே.

உரைச்சிறப்புப்பாயிரம்-முற்றிற்று.

---

இஃது இந்நூலுரையாசிரியர் மாணாக்கராகிய
இராமசாமிக்கவிராயர் பா-வாத்தியார்முனியப்பமுதலியார்
இவர்களாற்செய்யப்பட்டது.

கடவுள்வணக்கம்.

நிருவிகற்பசமாதியினின்றெழும்
பொருவிலானந்தபோதனைப்பேணுவா
மொருமைமுத்தியுதவுகைவல்லிய
வருமைநூற்கெனுநின்றுரையாற்றவே.

அருளிறைவணக்கம்.

ஒளிநிறைந்தவுணர்வின்பொறுமையே
களிகொண்மானிடனுருக்காட்டியிங்
கெளிதினணைவந்தென்னையெனக்கரு
ளளிர்மலர்ப்பதத்தையனையேத்துவாம்.

---

ஓம்சற்குருவேநம.

# கைவல்யநவநீதம்.

## முதலாவது.

## தத்துவவிளக்கப்படலம்.

### பாயிரம்.

### அவதாரிகை.

வடநூலாராய்ச்சியில் வல்லமையுள்ள இந்நூலாசிரியர் தாமனுபவித்தசுவானுபூதிப்பிரத்தியட்சத்தையுலகஞ்சுளுவிலடைந்தானந்தாதீதமாகும்பொருட்டருளினாற்சொல்லப்புகுந்த இந்நூலினதுமுடியவதனந்தரங்கமான விரஞ்ஞானம்பிரமமென்னுமிருக்கு வேதமகாவாக்கியார்த்தமாகவிளங்குமத்துவிதஸ்வரூபத்தை விலட்சணமாகவுஞ்சலட்சணமாகவுந்துதிப்பான்றொடங்கி யிச்செய்யுளிற் சமாதியின்கண்ணுதயமானவிலட்சணமாகிய கூடஸ்தபிரமத்தைத் துதிக்கின்றார்.

பொன்னிலமாதராசை பொருந்தினர்பொருந்தாருள்ளந்
தன்னிலந்தரத்திற்சிவ சாட்சிமாத்திரமாய்நிற்கு
மென்னிலுங்களினுமிக்க வெழுநிலமவற்றின்மேலா
நன்னிலமருவுமேக நாயகன்பதங்கள்போற்றி.

### இதனதுபதப்பொருள்.

பொன்-பொன்னிடத்தும்-நிலம்- மண்ணினிடத்தும்- மாதர்-மடவாரிடத்தும்-ஆசை பொருந்தினர்-ஆசையுள்ள அஞ்ஞானிகளும் பொருந்தார்-நிராசையுள்ள ஞானிகளுமாகிய இவர்களது உள்ளந்தனில்இதையாம்பரத்தில்-அந்தரத்தின்-நான்குபூதங்களினு நிறைந்திருக்கின்றவாகாயத்தைப்போல் சிவசாட்சிமாத்திரமாய் கூடஸ்தசைதன்னியமாத்திரமாகநிற்கும் நிறைந்திருக்கின்ற எந்நிலங்களினும்-எவ்விதமானநிலைகளிலும் மிக்கமேலாய்-எழுநிலமவற்றில் ஞானபூமிகளேழுனுள் மேலாநன்னிலமருவும் முடிவாகிய துரியபூமியிற்பொருந்திய ஏகநாயகன் ஒன்றாகியபிரமசைதன்னியத்தின் பதங்கள்போற்றி திருவடிகளை வணங்குவாம்-என்றவாறு.

பதசாரம்:

சகலசமயங்களுக்கு மேலான துரியபூமியென்பார்-எந்நிலங்களினுமிக்க வெழுநிலமெனவும் அவைகளின் முடிவானது துரியபூமியென்பார்-நன்னில மெனவும்-அதனிடமாக விளங்குகின்றது துரியாதீதமென்பார்-யேகநாயகனெனவும் அக்கேதுரியஸ்வரூபமாய்ச் சொரூபமுதல்ஸ்தம்பபரியந்தஞ்சர்வவியாபகமாய் வியாபித்துவிளங்குவதென்பார்பொன்னிலமாதராசைபொருந்தினர்-பொருந்தாருள்ளந்தனி லந்தரத்திற் சிவசாட்சிமாத்திரமாய்நிற்குமெனவும்யாவர்க்குஞ்சைதன்னியத்திற்பிரகாசமான கூடஸ்தபிரமமே யிடமென்பார்பதங்களெனவும் அவைகளினைக்கியமேயத்துவிதமென்பார்போற்றியெனவும்கூறினர் பொன்னிலமாதரென்பது இச்சையைவிளைப்பதற்குக்காரணமான வீடணத்திரியமெனக்கொள்கபுத்திரேடணையென்பதையவனுரிமையிற் பெறுவதாகிய வரசின்மேல்வைத்துக் கூறினர்.

இதன்றாற்பரியம்.

அகோசரமான நிரதிசயானந்தவஸ்து கோசரிக்குமிடத்துப்பூரணானந்தமாகப்பிரவேசித்து நித்தியானந்தசாக்ஷாத்காரமாகத்தடித்துஅதிலதிதமாகவிளங்குவதைப்பிரமமாகவு மக்தேவிடயசம்பந்தங்களில் சாருக்கற்றிருந்ததைப் பிரதயேகாத்மவஸ்ரூபமாகவுந்துதித்ததாம்.

அ-கை. இச்செய்யுளின்முற்கூறியவத்துவிதவஸ்துவை சகசநிஷ்டையிற்சலக்ஷணமாகவிளங்கிய-சுயம்-சைதன்னியமாகத்துதிக்கின்றார்.

ஈன்றளித்தளிக்குஞ்செய்கைக் கேதுவாமயனுய்மாலா
யான்றவீசனுமாய்த்தானே யனந்தமூர்த்தியுமாய்நிற்கும்
பூன்றமுத்தனுமாயின்பப் புணரியாதவனுய்நாளுந்
தோன்றியவிமலபோத சொரூபத்தைபணிகின்றேனே.

இ-ள். ஈன்றுசிருஷ்டித்து-அளித்து-இரட்சித்து-அழிக்கும் சங்கரிக்கும் செய்கைக்கேதுவாம்-இம்மூத்தொழிற்கு மேதுவாகிய அயனுய்பிரமனுகியும் மாலாய்விஷ்ணுவாகியும்ஆன்ற வீசனுமாய்-மாட்சிமையுள்ளவுருத்திரனுகியும் அனந்தமூர்த்தியுமாய் இன்னுமனேகவடிவங்களாயும்நிற்கும்இருக்கின்றபூன்றமுத்தனுமாய்பூரணமானமூர்த்தனுகியும் இன்பப்புணரியாதவனுய் ஆனந்தசமுத்திரத்தி லுதிக்குஞானசூரியனுகியும் நாளுந்தோன்றியசதோபமாகிய விமலபோத சுத்த சைதன்யமான சொரூபத்தைப் பணிகின்றேன் பிரமஸ்வரூபத்தை வணங்குகின்றேன் என்றவாறு.

ப-ம். தனது ஸ்புராணமெல்லாந் தன்துவடிவமாக விளங்குமென்பார்(அயனாய்மாலாயுரன்றவீசனுமாய்த் தானேயனந்தமூர்த்தியுமாய்(நிற்குமெனவும்-பேரின்பவிளக்கமே சைதன்னியமென்பார் இன்பப்புணரியாதவனெனவும் உற்பத்தித்திதிலயங்களின்றி விளங்கின சுத்தசைதன்னியமென்பார்(நாளுந்தோன்றிய விமலபோதசொரூபமெனவுங்கூறினார்) (இ-ம்)சர்வம்பிரமமயமென்னுமுபதேசவாக்கியப்படிக்கு ஸ்வரூபசாட்சாத்காரமான சுத்தசைதன்னியத்தை துதிசெய்ததாம்.

(அ-கை)முற்கூறியவாத்மஸ்வரூபமேவடிவமானவருளியைதீதமாகவும் சாட்சாத்காரமாகவுந் துதிக்கத்தொடங்கி யிக்கவியி லதீதமாகத்துதிக்கின்றார்.

எவருடையருளால்யானே யெங்குமாம்பிரமமென்பார்
கவருடைப்புவனமெல்லாங் கற்பிதமென்றறிந்து
சுவருடைவெளிபோல்யானே சொரூபசுபாவமானேன்
அவருடைப்பதுமைபாத மனுதினம்பணிகின்றேனே.

இ-ள் எவருடையருளால்-யாவருடையகிருபையினால் - யானேநானேஎங்குமாம்பிரமம்-எவ்விடத்திலு நிறைந்திருக்கின்றபிரமஸ்வரூபமும்என்பால்-என்னிடத்தில் கவருடைப்புவனமெல்லாம்-தோற்றிவிரித்திருக்கின்றவுலகமுழுதும்-கற்பிதமென்றறிந்து - பொய்யென்றறிந்து சுவரிடைவெளிபோல்-சுவரிடத்திருக்குங் கனம்போல் யானே-நானே-சொரூபசுபாவம்-பிரமசுபாவமும்-ஆனேன் - ஆயினேன்-அவருடைய அவரதுபதுமபாதம்-கமலமலர்போன்ற திருவடிகளை-அனுதினம்-எப்போதும்பணிகின்றேன்-வணங்குகிறேன்-எ-று.

ப-ம் சர்வபிரமமென்பார் எங்குமாம் பிரமமெனவும்-சர்வமுமில்லைஎன்பார் (கவருடைபபுவனமெல்லாங்) கற்பிதமெனவும் யாவுந்தன்மயமாக விளங்குவனவென்பார்-சொரூபசுபாவமானேனெனவுங் கூறினார்(இ-ம்)சர்வமாய்ச்சர்வமிலதாயிருக்கின்ற தன்னை தன்னிடத்துதானாயிருந்துவிளங்கியகுரு துரியத்தைவணங்கினதாம். ௩

(அ-கை)இச்செய்யுளிற் சற்குருசொரூபத்தை சாட்சாத் காரமாகத்துதிக்கின்றார்.

என்னுடைமனதுபுந்தி யிந்திரசரீரமெல்லா
மென்னுடையறிவினாலே யிரவிமுன்னிமமேயாக்கி
யென்னுடைநீயுநானு மேகமென்றயிக்கியன்செய்ய
வென்னுடைகுருவாய்த்தோன்று மீசனையிறைஞ்சினேனே.

இ-ள். என்னுடை-என்னுடையமனதுபுந்தி-மனம் புந்திகளாகிய வந்தகாரணமும் இந்திரியம்-ஞானேந்திரியன் கன்மேந்திரியங்களுஞ்சரீரம்தூலதேகமுமாகிய-எல்லாம்-இவைகளனைத்தும் என்னுடை

யறிவினால்என்னதாத்மஞானத்தினால் இரவிமுன்னிமமேயாக்கி-சூரியனைக்கண்டபனிபோலச்செய்து-என்னுடைய-எனதுசுபாவமான நீயும் நீயென்னுங்கூடஸ்தனும் நானும்நானென்னும்பிரதமமும் ஏகமென்றுஒன்றேயெனஐக்கியஞ்செய்ய-அத்துவிதமாக்க என்னுடைகுருவாய்-என்னதாசாரியராக-தோன்றுமீசனை-உதயமான வருளிறைனைய-இறைஞ்சினேன்-வணங்கினேன்(ப-ம்)தனதுபிரியத்தடிப்பேகுருஸ்வரூபமென்பார்-என்னுடையகுருவெனவும்-தன்னையிரட்சிக்குநிமித்தமுதயமானதருளிறையென்பாரீசனெனவுங்கூறினார்(இ-ம்)மனமுதலிய தத்துவங்களனைத்தையுஞ்சமாதிஞானத்தினாற் கரைத்தனிலுதையமாகுமானந்தமாகிய வஃதே யிக்திக்தேயுக்தென்னுமத்துவிதஸ்வரூபத்தைதரிசிப்பிக்கும் பொருட்டு பூரணமேயோருருவாகவெழுந்தருளிய வாசாரியரைவணங்கினதாம்.

(அ-கை)தனதாசிரியரைவணங்கிய வருளினாற்சிறப்புகுந்த விந்நூன்முகத்திற்கூறப்படும் விடயமு மிதனாலுண்டாகும்பயனு மிந்நூற்குமிதிற்கூறப்படுவதாகியவிடயத்திற்குமுள்ளசம்பந்தமு மிதுகேட்டதற்குறியவதிகாரியுமாகிய வனுபந்தசதுட்டயமிந்நூரதற்குமாணாக்க னுணரும்பொருட்டுரைக்கவேண்டுதலினவற்றுளதிகாரியும்விடயமு மிச்செய்யுளிற்கூறுகின்றார்.

அந்தமுநடுவுமின்றி யாதியுமின்றிவான்போற்
சந்ததமொளிருஞான சற்குருபாதம்போற்றி
பந்தமும்வீடுங்காட்டப் பரந்தநூல்பார்க்கமாட்டார்
மைந்தருமுணருமாறு வஸ்துதத்துவஞ்சொல்வேனே.

இ-ள். அந்தமுநடுவுமின்றி யாதியுமின்றி ஆதிமத்தியானந்தரகிதமாய்வான்போல் ஆகாயத்தைப்போல் சந்ததமொளிரும்சகோதமாய்விளங்குகின்ற ஞானசற்குருபாதம்போற்றி ஞானசாரியரதுபாதத்தைவணங்கி பந்தமும் வீடுங்காட்ட பெத்தமு முத்தியுமாகிய விவைகளின் ஸ்வரூபத்தைதெரிவிக்கும் பொருட்டு-பரந்தரவிரிந்திருக்கின்ற-நூல்வேதாந்த சாஸ்திரங்களைப் பார்க்கமாட்டாமைந்தரும் ஆராய்ந்தறிய சத்தியில்லாதசீடரும்-உணருமாறு-எளிதிலுணரும்படி-வஸ்துதத்துவஞ் சொல்வேன்-பரவஸ்துவினுண்மையைச் சொல்வேன்-எ-று. மைந்தரென்பத்திகாரியெனவும் வஸ்துதத்துவமென்பது விடயமெனவுங்கொள்க பரந்தநூல் பார்க்கமாட்டா மைந்தருமென்னுமும்மையாற் பார்ப்பவர்களென்பதுமாயிற்று ப-ம் காலமுதலியவை நசிக்கினுந் தானசிபாதிருத்தலி னந்தமின் றெனவும் இடையின்றித்தான் பூரணானந்த மாக விளங்குதலின் நடுவின்

றெனவும்எப்போதும்தான்சுயமாய்ப் பிரகாசித்தலின் நாதியுமின்றி யெனவும் இங்ஙனஞ்சதோதயமாவிளங்கியசச்சிதானந்த சுத்தசை தங்கியமே குருசொரூபமாதலால் சந்ததமொளிரு ஞானசற்குருவெனவும் தான்தன்மயமாய்நிற்றலின் பாகம்போற்றியெனவும் கல்வியல்லலெனக் கண்டத்தின் சாரமானதன்னை விரைவிற் றெரிந்துகொள்ளவிருப்பமுற்றவர்களெளிதினுணரும்படி யுணர்த்துதலின் பரந்தரால் பார்க்கமாட்டாமைந்தருமுணருமாறுவஸ்துதத்துவஞ் சொல்வேனெனவும் கூறினர்.

அ-கை இச்செய்யுளிற்சம்பந்தமும் பிரயோசனமுங்கூறுகின்றார்.

படர்ந்தவேதாந்தமென்னும் பாற்கடன்மொண்டுமுந்நூற்
குடங்களினிறைத்துவைத்தார் குரவர்களெல்லாங்காய்ச்சிக்
கடைந்தெடுத்தளித்தேனிந்தக் கைவல்யநவநீதத்தை
யடைந்தவர்விடயமண்டின் றலைவரோபரிசிலாரோ.

இ-ள். படர்ந்த விரிந்திருக்கின்ற-வேதாந்த மென்னும்-உபநிடத மென்னும் பாற்கடன்மொண்டு க்ஷீரசமுத்திரத்தின் முகந்து முன்னூற்குடங்களில்-முந்நூலாகியகுடங்களில்-குரவர்கள்-ஆசிரியர்கள் நிறைத்துவைத்தார்-பூரித்து வைத்தார்கள்-எல்லாங்காய்ச்சி அவைகளத்தனையுங் காய்ச்சிகடைந்து-கடைதல்செய்து, இந்தக்கைவல்ய நவநீதத்தை இஞ்ஞானசாத்திரமாகியகைவல்யநவநீதத்தை எடுத்தளித்தேன்-எடுத்துக்கொடுத்தேன்-அடைந்தவர்-இதை புசித்தவர்கள்-பசியிலார்நித்தியதிருத்தியடைந்தவர்களாதலால்விடய மண்டின் றுவிடயாநந்தமென்னு மண்ணைபுசித்து அலைவரோ-பலத்திற் சுழல்வார்களோ-சுழலார்-எ-று.

கைவல்யநவநீதமென்பது சம்பந்தமும் அடைந்தவர் பசியிலாரென்பது-பிரயோசனமு மாமெனக்கொள்க.

ப-ம்.வேதமுடிவானமகாவாக்கிய மோர்மொழியாயினு மக்துசிடனுக்குபோதமாகும்போதமா கும்பொருட்டுண்டான சுத்தவேதாந்தமென்னும் பாற்கடலெனவும் அவைகளிற் றங்களுக் கனுபவமாகும் பொருட்டாகி யெடுத்தறிவித்த வாக்கியங்களை எடுத்துக் கோடலை மொண்டெனவும் தாம்பெற்றபேருலகம்பெறும்படி பாவினமாகிய நூல்களிலவ்வாக்கியங்களை யமைத்தலை முன்னூற்குடங்களினிறைத்துவைத்தார்குரவர்களெனவும்-அப்பலசாத்திரங்களிலுள்ள வாக்கியங்களைசேகரித்தலை எல்லாமெனவும்அவ்வாக்யங்களின் பூர்வபட்சத்தைநீக்கிவிசாரத்தாற் சித்தாந்தப்படுத்துதலைகாய்ச்சியெனவும் அச்சித்தாந்தத்தை குருவுபதேசத்தாற் சமாதியிலனுபவமானவருய்கலைகடந்தெனவும் அத்திலுதயமான நிருவாணசுகத்தை யெடுத்தோ

ர்நூலாகத்தந்ததை எடுத்தளித்தேனிந்த கைவல்யநவநீதத்தை யெனவும் இதைப்பெற்றனுபவித்து திருத்தியடைதலை அடைந்தவர் பசியிலாரெனவும்இவ்வாரூடர்விடயவித்தையினாற் சநநமரணத்திற்சுழலாரென்பதைவிடயமண்டின்றலைவரோவெனவும்கூறினார் இ-ம்பிரமனென்னுங் காமதேனுவிற் சுரந்தசுருதிக ளென்னும் பாலைவிசாரமெமக்கினியாற்பூருவபட்சமென்னும்நீர் கண்டசித்தாந்த மென்னுமத்திட்டு அனுபவவாராய்ச்சியென்னுங்கடைதலைச் செய்ததிலெழுநின்ற கைவல்யமென்னுநவநீதத்தை அனுபவித்தலைபழைத்துநித்திய திருத்தியான பசியிலார்விடயானந்தமண்ணைப் புசியார்களெனக் கூறினதாம்.

அ-கைஉபாசனாமூர்த்தியைவணங்கிஇந்நூலின்
பலவகைகூறுமென்றார்.

முத்தனைவேங்கடேச முகுந்தனையெனையாட்கொண்ட
கத்தனைவணங்கிச்சொல்லுங் கைவல்யநவநீதத்தை
தத்துவவிளக்கமென்னுஞ் சந்தேகந்தெளிதலென்றும்
வைத்திருபடலமாக வகுத்துரைசெய்கின்றேனே.

இ-ள். முத்தனை-பாசங்களை-நீக்கினிற்பவனை வேங்கடேச முகுந்தனைவெங்கடாசலபதியாகியதிருமாலையெனையாட்கொண்டகர்த்தனை என்னையடிமைகொண்ட-விறைவனை-வணங்கிபணிந்துசொல்லுங்கைவல்யநவநீதத்தை உரைக்குக்கைவல்யநவநீதமென்னுஞானசாத்திரத்தைதத்துவவிளக்கமென்றும் தத்துவவிளக்கமெனவும் சந்தேகந்தெளிதலென்றும் சந்தேகந்தெளித லெனவும்-வைத்து நாமந்தரித்துஇருபடலமாக வகுத்து இரண்டுபடலமாக பிரித்து உரைசெய்கின்றேன்சொல்லுகின்றேன்.

(இ-ம்)(வெளிப்படை-பாயிர-முற்றிற்று.)

அ-கை முற்கூறியபடலங்களுள் தத்துவவிளக்கமென்னும் படலத்திற்றத்துவத்தை விளக்கும்பொருட்டு முற்கண் அதுகேட்குமதிகாரிக்குரியசாதன சதுட்டயவிலக்கணம்கூறுகின்றார்.

நித்தியவநித்தியங்க ணிண்ணயந்தெரிவிவேக
மத்தியவிகபரங்கள் வருபோகங்களினிராசை
சத்தியமுறைக்கவேண்டுஞ் சமாதியென்றாறுகூட்ட
முத்தியைவிரும்புமிச்சை மொழிவர்சாதனமிந்நான்கே.

இ-ள். நித்தியவனித்தியங்கள் நித்தியாநித்தியவஸ்துக்களின் நிண்ணயந்தெரிவிவேகம்நிச்சயந்தெரிகின்றவிவேகம் மத்திய இடையிலு

ள்ள இகபரங்கள் இகலோகபரங்களில் வருபோகங்களின்கண்டாகிற செல்வங்களில் நிராசைவிராகமும் சத்தியமுறைக்கவேண்டும்உண்மையாகச்சொல்லதகுந்தசமாதியென்றாறும்கூட்டம்சமாதிகட்கம் பத்தியும்முத்தியைவிரும்புமிச்சைமுமூட்சுத்துவமுமாகிய இந்நான்கும்இந்நான்கையும் சாதனம் சாதனத்துட்டயமென்று மொழிவர் சத்துருக்கள்சொல்லுவார்கள்.

அ-கை இதுவுமது

சமந்தமம்விடல்சகித்தல் சமாதானஞ்சிரத்தையாறுஞ்
சமமகக்கரணதண்டந் தமம்புறக்கரணதண்ட
மமர்மனைவிபகாரங்க ளருக லவிடலென்றுகு
மமர்செயுஞ்சுகதுக்காதி யனுபவிப்பதுசகித்தல்.

இ-ள். சமம் சமமெனவும்-தமம்தமமெனவும்விடல் உபாதியெனவும், சகித்தல் திதீட்சையெனவும்-ஆறும் ஆறுகும்-சமம் சமமாவது அகக்கரணதண்டம்அந்தக்கரணத்தைதண்டித்தலாம்தமம்-தமமாவது புறக்கரணபுத்தி தன்கண்ணுள்ள தசேந்திரியங்களை தண்டித்தலாம்விடல்விடலென்பது அவர்மனைவிபகாரங்கள்விரும்பப்பட்டகுடும்பவிபகாரங்களை அருகலென்றும் சருங்கச்செய்தலாம் சகித்தலாவது அமர்செயும் கலகஞ்செய்கின்றசுமந்துக்காதி இன்பதுன்பமுதலியவைகளை அனுபவிப்பதுபிராரத்தமென்றுசமசித்தமாயனுபவிப்பதாம்-எ-று.

அ-கை இதுவுமது.

சிரவணப்பொருளைத்தானே சித்தஞ்சித்திக்குமாறு
சரசமாய்வைக்குமித்தைச் சமாதானமென்பர்மேலோர்
பரமசற்குருநூலன்பு பற்றிலேசிரத்தையாகும்
வரமிகுசமாதியாறு வகையாஞ்சொற்பொருளிதாமே.

இ-ள். சிரவணப்பொருளை வேதாந்தசிரவணார்த்தங்களைசித்தம்சித்திக்குமாறு பிரியாமற்சிந்திக்கும்படி சரசமாய்வைக்கும் இனியதன்மையாகச்செய்யும் இத்தை இதைமேலோர்மகான்கள் சமாதானமென்பர்சமாதானமென்றுசொல்வார்கள் பரமசற்குருமேலானவாசியிடத்தும்நூல்வேதாந்தசாஸ்திரங்களிடத்தும்அன்புபற்றல் அன்புவைத்தல் சிரத்தையாகும் சிரத்தையாம் வரமிகுமேன்மை மிகுந்தசமாதிசமாதிஎன்னும் ஆறுவகையாஞ்சொற்கு ஆறுபிரிவானபதத்துக்குபொருளிதாம் அருத்தமிதுவாம்.

இ-ங-க-ப்-அநித்தியவஸ்துக்களிவையெனக்கண்டுநித்தியவஸ்துவையுடைதற் கேதுவான குணங்களையே சாதான சதுட்டய மாக்கூறினதாம்.

அ-கை அச்சாதனங்களினின் றுவமையாகச்சிறப்பினவெனவுமத னுலுண்டாகும் பயனிக்தெனவுங்கூறுகென்றார்.

சாதனமின்றியொன்றைச் சாதிப்பாருலகிலில்லை
யாதலாலிந்நான்குமடைந்தவர்க்கறியுண்டாகு
நூதனவிவேகியுள்ளி னுழையதுநுழையுமாகிற்
பூதசென்மங்கள்கோடி புனிதனும்புருடனுமே.

இ-ள். சாதனமின்றிசாதனமில்லாமல்ஒன்றை ஒருகாரியத்தைசாதிப்பார் சாதிப்பவர்கள்உலகிலில்லை பூமியின்கண்ணிலில்லை ஆதலால் ஆகையால்இந்நான்கும் இச்சாதனசதுட்டயங்களை அடைந்தவற்கு பெற்றவர்களுக்குஅறிவுண்டாகும்ஞானோதயமாகும் நூதனவிவேகியுள்ளில்புதியவிவேகியின்மனதில் நுழையாதுபுகாதுநுழையுமாகில் புகுமானால்பூதஇறந்தகாலத்துள்ளசென்மங்கள்கோடி அந்தசனனங்களில்புநிதனும்புருடனும் சித்திசுத்தியுள்ளவனுகியபூமானும் எ-று இ-ம் மெய்யுணர்வையுணர்தற்கிச்சாதனங்களவசியம் வேண்டுமென்பதாம்.

அ-கைஅச்சாதனமுள்ளசீடனது தீவிரபக்குவத்தையறிவித்தல்.

இவனதிகாரியானே னிந்திரியங்களாலும்
புவனதெய்வங்களாலும் பூதபௌத்திரங்களாலும்
தவனமூன்றடைந்துவெய்யிற்சகித்திடாப்புழுப்போல்வெம்பி
பவ்வறுஞானதீர்த்தம் படிந்திடப்பதறினனே. [ப்

இ-ள். இவனிச்சாதனத்துட்டயமுள்ளவனே அதிகாரியானேன் இந்நூலுக்கதிகாரியாவான் இந்திரியங்களாலும் ஆதியாத்மிகத்தினுலும்புவனதெய்வங்களாலும்ஆதிதெய்வீகத்தினுலும் பூதபௌதிகங்களாலும்ஆதிபௌதிகங்களாலும் தவனமூன்றடைந்து தாபத்திரயாக்கினியைகடந்து வெய்யிலிற் சகித்திடாப்புழுப்போல் சூரியனுஷ்ணகிரணத்துக்குசகிக்கமாட்டாதகிருமியைப்போல்வெம்பிவெப்பமுற்று பவமறும்பிறவியையொழிக்கின்ற ஞானதீர்த்தம் படிந்திடஞானசாகரத்தில்மூழ்க பதறினன்தீவிரமுற்றான்-எ-று. இ-ம் தாபத்திரயாக்கினியாகியசம்சாரதுன்பங்களுக்காற்றாதவனே யவைநீங்கிபிரமானந்தமடையவிரைவனென்பதாம்.

அ-கை அத்திவரதாபக்குவனுக்காசிரியர் தரிசினமாதல்.

ஆனம்மனை விமக்களர்த்தவீடணை கண்மூன்றிற்
கானவர்வலையிற்பட்டுக் கைதப்பியோடுமான்போற்
போனவன்வெறுங்கையோடே போகாதவண்ணஞ்சென்று
ஞானசற்குருவைக்கண்டு நன்றாகவணங்கினானே.

இ-ள். ஆனவிம்மனைவி தனக்கானவிவ்வில்லாளும் மக்கள் புத்திரரும்-அர்த்தம் தனமுமாகிய ஈடணைக்கண்மூன்றில் ஈடணாத்திரியங்களினின்றும் கானவர் வலையிற்பட்டு வேடர்கள்வீசும் வலைக்குளகப்பட்டுகைதப்பியோடு மான்போல் தவறிச்செல்லு மிரணத்தைப்போலபோனவன் ஓடினவன் வெங்கையோடேசும்மாபோகாதவண்ணம் செல்லாதபடிசென்று உள்ளத்திலன்பும் புறத்திலாராதனைக்குரியவஸ்துக்களுங்கொண்டுபோய் ஞானசற்குருவைக்கண்டு ஞ்ஞானாசாரியரைத் தரிசனஞ்செய்து நன்றாக திரிகான சுத்தியாக வணங்கினான் பூரித்துப் பணிந்தான்-எ-று இ-ள் ஈடணாத்திரயமான துன்பங்களினின்று நீக்கிய விலாணுங்கின்பவடிவமான சற்குருதெரிசனமாயிற்றென்பதாம்.

அ-கை தரிசனஞ்செய்த அவ்வாசிரியரிடத்திற்செய்யும்விண்ணப்பம்

வணங்கிநின்றழுதுசொல்வான் மாயவாழ்வெனுஞ்சோகத்தா
லுணங்கினேனையனேயென்னுள்ளமேகுளிரும்வண்ணம்
பிணங்கியகோசபாசப் பின்னலைச்சின்னமாக்கி
யிணங்கியகுருவேயென்னை யிரட்சிக்கவேண்டுமென்றான்.

இ-ள். வணங்கிநின்று பணிந்தெழுந்துநின்றுஅழுதுசொல்வான் கண்ணீர்சொரியவழுதுரைப்பான் மாயவாழ்வெனும் பொய்யானகுடும்பவாழ்க்கையென்னும்சோகத்தால் துன்பத்தினால்-உணங்கினேன்வாடினேன் ஐயனே எனதாசிரியரே என்னுள்ளம் எனதகம் குளிரும்வண்ணம் சீதளமாம்படிபிணங்கிய செறிந்திருக்கிற கோசபாசப்பின்னலை கஞ்சகோரமாகிய பந்தம்பின்னலை சின்னமாக்கிதூளாக்கி இணங்கிகுருவேமுத்தியைபடைவிப்பதற்குடன்பட்டிருக்கு மாசிரியரே என்னை அடியேனை இரட்சிக்கவேண்டுமென்றான் எ-று இ-ள் அறிவின்மையால்வரும் பவத்துன்பத்தை நீக்கி யறிவினால்வருமின்பத்தின் மூழ்கும்படி செய்விக்க வாசிரியரைவேண்டிக் கோடலாம்.

அ-கை அங்ஙனம்வினவின சீடனைப்பரிசோதித்தல்.

அன்னைதன்சிசுவைவ்யய ஞமைமீன்பறவைபோலத்
தன்னகங்குந்திநோக்கித் தடவிச்சந்நிதியிருத்தி

யன்னதுபிறவிமாற்று முபாயமொன்றுண்டுசொல்வேன்
சொன்னதுகேட்பாயாகிற் றொடர்புவந்தொலையுமென்றார்.

இ-ள். அன்னை தாயையொத்த ஐயன் குருவானவர் தன்சிசுவை தன்னுடைய சிடனை ஆமை கூர்மத்தைப்போல் தன்னகங்கருதி தனதுள்ளத்தினினைத்து மீன்மச்சத்தைப்போலநோக்கி பூரணதிஷ்டிவைத்துபறவைபோல் பட்சியைப்போல்தடவி அஸ்தமஸ்தகன்யோகஞ் செய்து சந்நிதியிருத்தி எதிரிலிருக்கவைத்துஉன்னதுபிறவிமாற்றும் உனதுபவத்துன்பத்தைநீக்கும் உபாயமொன்றுண்டு தந்திரமொன்றிருக்கின்றதுசொல்வேன் உபதேசிப்பேன்சொன்னது கேட்பாயாகில் போதித்தவண்ணங்கேட்டு நடப்பாயாகில் தொடர் பவம்சிருஷ்டிமுதற்றொடருஞ்சநநமானது தொலையுமென்றார்நீங்குமென்றருளினார்-எ-று-ப-ம்விஷயத்தைநினைக்குமாகாமியத்தைக்கெடுத்தறிவையுணரும்படிசிந்தித்தாரென்பார்ஆமைபோற்கருதியெனவும் முன்பந்தப்பட்டிருக்கின்றசஞ்சிதமொழிந்து தனதுசுத்தமாத்திரமானதிருஷ்டிவரும்படி பார்த்தாரென்பார் மீன்போனோக்கியெனவும்-பிரார்த்தமாகவந்தபௌதிகவடிவும்நித்தியானந்தமாகவிளங்கத்தனது பூரணானந்தமாக வியாபித்தா ரென்பார் பறவைபோற்றடவியெனவுங்கூறினார்.

இ-ம் சமஸ்காரஞ்செய்தவாசிரியர் உபதேசிப்பதற்காக வகம்மைகளுளவே விலவோவெனவாராய்ந்ததாம்.

அ-கை ஆசிரியர்வசனத்தின்மகிழ்ந்தன்புகூர்தல்.

தொடர்பவந்தொலையுமென்று சொன்னதைக்கேட்டநேரந்
தடமடுமூழ்கினான்போற் சரீரமுங்குளிர்ந்துள்ளாறி
யடருமன்பொழுகுமாபோ லானந்தபாஷ்பங்காட்டி
மடமலர்ப்பாதமீண்டும் வணங்கிநின்றீதுசொல்வான்.

இ-ள். தொடர்பவம் தொன்றுதொட்டுத்தொடாநின்ற சநநமானது தொலையு மென்று நீங்குமென்று சொன்னதை அருளியதை கேட்டநேரம் கேட்டபோதே தடமாடு விசாலமான தடாகத்தில் மூழ்கினான்போல முழுகினவனைப் போல சரீரமுங் குளிர்ந்து தேகமுங் குளிர்ச்சியாய் உள்ளாறி மனங்குளிர்ந்து அடருமன்ப நிறைந்தவண மானது ஒழுகுமாப்போல் கரை யழித்துச் செல்வதுபோல ஆனந்த பாஷ்பங் காட்டி இரண்டு கண்களினு மானந்த பாஷ்பம் பெருக மடன் மலர்ப் பாதம் இதன் விரிந்த கமலமலர்போன்ற பாதங்களை மீண்டுந் திரும்பவும் வணங்கிப் பணிந்து எழுந்து நின்று ஈது சொல்வான் இதனைச் சொல்லத் தொடங்கு வான்-எ-று.

அ-கை சீடன் விண்ணப்பத்திறு லகமின்றென்பதை குறிப்பி னுலரிதல்

சொன்னதுகேட்கமாட்டாத் தொண்டனுனுஞ்சுவாமி
நின்னதுகருணையாலே நீரென்னையாளலாமே
யுன்னதுபிறவிமாற்று முபாயமொன்றுண்டென்றீரே
யின்னதென்றதைநீர்காட்டி யீடேற்றல்வேண்டுமென்றான்.

இ-ள். சொன்னதை போதித்ததை கேட்கமாட்டா கேட்டுநடக்கமாட்டாத தொண்டனுனும் அடிமையானுனும் சுவாமி என் தெய்வமேநினதுகருணையால் தேவரீரது கிருபையினுல் நீரென்னை தேவரீரடியேனை ஆளலாமே தடுத்தாளலாமே உனது பிறவிமாற்றும் உனதுபவத்தைக்கெடுக்கும் உபாயமொன்றுண்டென்கிறீரே தந்திரமொன்றிருக்கின்றதென்றருள்செய்தீரே, இன்னதென்று - இந்தன்மையதென்று, அதை அவ்வுபாயத்தைநீர்காட்டி தேவரீர் காண்பித்து ஈடேற்றல் வேண்டுமென்றான் இரட்சிக்கவேண்டுமென்றான். எ-று. (இ-உ-க-ம்) சீடனறிவுஎவ்வளவுதுல்யமானுலும் தன்கண்ணுதயமானவானந்தத்திற்கு விளக்கமாக வஸ்தை விளக்குதல்குருதுரியமாதலாற்குருவருளே விளக்கவேண்டுமென்பதாம்.

அ-கை. அகம்பாவ மின்றென்பதையறிந் தாத்மஸ்வரூபத்தை யுபதேசிக்கத்தொடங்கல்.

அடங்கியவிருத்தியானென் றறிந்தபின்செறிந்தமண்ணின்
குடம்பையுட்புழுமுன் னூதுங் குளவியின்கொள்கைபோலத்
தொடங்கியகுருவுமாமை சொரூபமேமருவவேண்டி
உடம்பினுட்சீவனைப்பார்த் துபதேசமோதுவாரே.

இ-ள். அடங்கியவிருத்தியானென்று விருத்தியடங்கினவனென்று அறிந்தபின் தெரிந்தபின் செறிந்த நெருங்கிய, மண்ணின்குடம்பையுள் மட்கூட்டினுள்ளிருக்கின்ற, புழுமுன் -கிருமியின்முன்னே ஊதுங்குளவியின் சத்திக்குளவியினது கொள்கைபோல் தன்மையைப்போல தொடங்கியகுருவும் உபதேசிக்கத்தொடங்கியவாசாரியரும், ஆத்மசொரூபம்-ஆத்மஸ்வரூபத்தை மருவவேண்டி சீடனையும்பொருட்டு உடம்பினுள் தேகத்தினுள்ளிருக்கும் சீவனைப்பார்த்து சீவனைநோக்கி உபதேசமோதுவார் உபதேசஞ்செய்வார்- எ-று.

இ-ள். சீடனதுயதார்த்தஸ்வரூபத்தைப்பார்த்தவனஸ்தாக விளங்கும்பொருட் டனுக்கிரகிக்கத்தொடங்கினதாம். ௰௮

அ-கை. பவத்தை நீக்கும்பொருட் டக்துண்டான காரணமும க்குறிற்குங்காலவளவையுங்கூறல்.

வாராயென்மகனே தன்னை மறந்தவன் பிற்சிறந்து
தீராதசுழல்காற்றுற் செத்தைபோற்சுற்றிச்சுற்றிப்
பேராதகாலநேமிப் பிரமையிற்றிரிவன்போத
மாறாயுந்தனைத்தானென் றறியுமவ்வளவுந்தானே.

இ-ள். என்மகனே எனதுபுத்திரனே, வாராய்கேளாய் தன்னை மறந்தவன் தனதாத்மசொரூபத்தை மறந்தவன் பிறந்திறந்து-த[illegible]த்துமறித்து தீராதசுழல்காற்றுற்ற ஓயாதசுழல்காற்றிலகப்பட்ட செத்தைப்போல் சருகைப்போல்-சுற்றிற்சுற்றி அப்பவத்திற் சுழன்றுசுழன்றுபேராதகாலநேமி நீங்காதகாலசக்கிரத்தினது பிரமையிற்றிரிவனகழற்சியிற்சஞ்சரிப்பன்போதமாராயுந்தன்னை அறிவினாலாராய்ந் தறியுமாத்மாவை தானென்று பிரமமென்று அறிவுமவ்வளவும் தெரியமட்டும்-எ-று. இ-ம் அறிவின்மையாலுண்டான பவமறிவுதயமாய்த்தன்னைத்தானெனவுணருமட்டு மிருக்குமென்பதாம். ௰௯

அ-கை. மகாவாக்கியவுபதேசப்பிரகாரம் அறியவேண்டியபொருளிதுவெனவறைதல்.

தன்னையுந்தனக்காதாரத் தலைவனையுங்கண்டானேற்
பின்னையத்தலைவன்றானாய்ப் பிரமமாய்ப்பிறப்புத்தீர்வ
னுன்னைநீயறிவாயாகி லுனக்கொருகேடுமில்லை
யென்னைநீகேட்கையாலே யீதுபதேசித்தேனே.

இ-ள். தன்னையும்கூடஸ்தனையும் தனக்காதாரத் தலைவனையும் தனக்கிடமான பிரமத்தையும்கண்டானேல்தரிசிப்பானாயில்பின்னை பின்பு-அத்தலைவன்றானாய் அப்பிரமேயகூடஸ்தனாய்பிரமமாய் அக்கூடஸ்தனேபிரமமாய் பிறப்புத்தீர்வன்சனனநீங்குவான் உன்னைநீயறிவாயாகில் உதைத்துவிஸ்வரூபத்தை நீதெரிந்துகொள்வாயானால் உனக்கொருகேடுமில்லை உனக்கொருகெடுதியுமில்லை என்னைஎம்மை நீகேட்கையால் நீகேட்கின்றபடியால் ஈதுபதேசித்தேன் எனதனுபவமானவிதைச்சொன்னேன் எ-று.

ப-ம். நசிப்பதானதேகமுதற்கிருதிபரியந்தம் ஒவ்வொன்றினு நசியாமற்றானைத்தேடித்திருக்கின்ற பிரத்தியோகாத்மசைதன்னியத்தைத்தன்னையெனவும் அங்ஙனஞ் சேடித்தேனே அவைகளனைத்தினும் பூரணமான பிரமசைதன்னியமாய் விளங்குவதைத் தலைவனெனவும் அத்தேயிக்கிக்தேயக்தேயதாய்விளங்குஞ் சுத்தசைதன்னியந் தானாகுவதை பின்னையத்தலைவன்றானாய்ப் பிரமாயெனவும் அங்ஙனம்விளங்கியவனுபவத்திற்குதயாஸ்தமனமின்மையாற் சனனமரணமின்றென்பதைபிறப்புத்தீர்வனெனவுங்கூறினர்.

அ-கை தன்னையறிய வேண்டுமென்பதைச் சர்வத்திரக் காதார ணமாக்க் கொள்ளுந்தேகமெனக்கருதிய கதையறிந்தவர்கள்பவநீ கிகாமையானத்தினுண்மையுணர வினவுதல்.

என்னைத்தான்கடனாக வெண்ணியேசொன்னீரையா
தன்னைத்தானறியாமாந்தர் தரணியிலொருவருண்டோ
பின்னைத்தானவர்களெல்லாம் பிறந்திறந்துழலுவானே
னின்னைத்தானம்பினேற்கு நிண்ணயமருளுவீரே.

இ-ள். என்னைத்தான் கடனாகளன்னையறியாதவனாகளண்ணியோ சொன்னீர் தகுதியாசொன்னீர்ஐயா எனதாசிரியரேதன்னைத்தான றியாமாந்தர் தன்னைத்தெரியாதமனிதர் தரணியிலொருவருண்டோ பூமியின்கண்ணொருவருண்டோ பின்னைபின்பு அவர்களெல்லாம்அ வர்களனைவரும்பிறந்துழலுவானேன் சநநமரணத்திற் சுழலுவானே ன்பின்னைதேவரீரைநம்பினேற்கு நம்பினவடியேனுக்குநிண்ணயமரு ளுவீர்நிச்சயத்தைசொல்வீர் எ-று ப-ம் ஆசிரியரனுபவப்படி தேக த்திற்றனாயிருந்த தன்னையறியவேண்டுமென்னவத்தனுபவமாகாதசீ டன்றேகமே தானெனக்கருதி யென்னை யானறியவில்லையாவென்று னென்பார்என்னைத்தானகடனாக வெண்ணியோ சொன்னீரெனவு ம்இங்ஙனமறிந்தயாவர்க்குஞ்சநநமரணமேநீங்கவில்லையென்பானெ ன்பார் பின்னைத்தானவர்களெல்லாம்பிறந்திறந்துழலுவானேனென வும்தானென்பதிக்தெனவுண்மையாகத் தெரிவிக்கவேண்டுமென்பா னென்பார் நிண்ணயமருளுவீரெனவுங்கூறினார் இ-ம் தானென்பத னுபவமாகும் பொருட்டதனியல்பைவிசாரித்தாம். உக

அ-கை. தானென்பதிக்தெனக்கூறியுந்தோன்றாததற்காகவாசி ரியர்வருத்தமுற்றிரங்குதல்.

இன்னதுதேகந்தேகி யின்னெனவுணர்வன்யாவ
னன்னவன்றன்னைத்தானென் றறிந்தவனாகுமென்றார்
சொன்னபின்றேகியாரித் தூலமல்லாமலென்றான்
பின்னதுகேட்டவையர் பீடையுங்கையுங்கொண்டார்.

இ-ள். தேகம்சரீரமானது இன்னது இத்தன்மையுள்ளது தேகி சரீரஇவனென்ன இத்தன்மையுள்ளவரென்று உணர்வன்யாவன் அறி கின்றவனெவனோ அன்னவன் அவன்தன்னை கூடஸ்தனை நானென் று பிரமமென்று அறிந்தவனாகுமென்பார் தெரிந்தவனாவ னென்றார் சொன்னபின் அங்ஙனம்போதித்தபின்பு இத்தூலமல்லாமல் இச்ச

ரீரமன்றிதேகியாரென்றான் சரீரியாரென்று கேட்டான் பின் பின்பு அதாஅவனதுபவத்தை கேட்டவையர்கேட்டவாசாரியர் பீடையும் துன்பமும் நகையும்புந்நகையும்கொண்டனர் -று ப-ம் இத்தேகந் தானயிருப்பவனை யெங்ஙன முப்விக்கலாமென வாலோசிக்கு மன வருத்தமும் தேகந்தானென வறிந்தவன்றேகியையுந் தானென்ற றி வனென்று மகிழ்ச்சியுங் கொண்டாரென்பார்பீடையுநகையுங் கொண்டாரெனக்கூறினர் இ-ம் ஆசிரியர்தனதனுபவமானசுத்தசைதன் னியத்தைத் தானென்றுகூறச் சீடன்தனக்கனுபவமான தேகந்தா னன்றித்தான்வேறுளதோவென வினவினதாம்.

அ-கை, தேகந்தானன்றதன் கண்ணுள்ளதேகியேதானென்ப து தனக்குத்தானேதோன்ற அர்த்தரத்தியங்களை யறிகின்றவன்யா ரென வாசிரியர் வினவுதல்.

தேகமல்லால்வேறே தேகியார்காணேனென்றாய்
மோகமாங்கனவில்வந்து முளைத்திடுமவனார்சொல்வாய்
சோகமாங்கனவுதோன்றாச் சுழுத்திகண்டவனார்சொல்லா
யாகநீநனவிலெண்ணு மறிவுதானேது சொல்லாய்.

இ-ள். தேகமல்லாமல் சரீரத்தையன்றிவேறே வேறாயுள்ளதே கியார்சரீரியார்காணேனென்றாய்யான்கண்டிலேனென்றாய் அங்ஙன மாயின் மோகமாம் மோகமாகிய கனவில்வந்து முளைத்திடுமவனார் சொற்பனத்திலுதித்தவன்யாவன் சொல்லாய் இதனைநீசொல்சோக மாங்கனவுதோன்றா மயக்கமாகிய சொற்பனந்தோன்றாத சுழுத்திக ண்டவனார் சுழுத்தியிற்சூனியமாகத் தரிசித்தவனார்சொல்லாய் சொ ல்லாய்ஆக ஆகியவிவ்விரண்டையும் நீநனவிலெண்ணும் நீசாக்கிரத் தினினைக்கும் அறிவுதானேது சொல்லாய் அறிவுயாது எ-று.(இ-ம்) தேகத்தைத்தவிரதேகியொருவனுள னென்பது தோன்ற வினவின தாம். உ௩

அ-கை தேகத்தின்கண்ணவத்தைகளை யறிகின்றதேகியொரு வனுளனெனத் தோன்றுகின்றது அதனைவிளக்கவேண்டுமெனல்.

நனவுகண்டதுநான்கண்ட நனவுளநினைவுநீங்கிக்
கனவுகண்டதுமிரண்டுங் காணுதசுழித்திகண்டுந்
தினமனுபவித்தலொக்குந் தெரியவுமில்லைசற்றே
மனதினிலுதிக்கும்பின்னை மறைக்குமதருளுவீரே.

இ-ள். நனவுகண்டதும்சாக்கிராவத்தையிற்பார்த்ததும்நான்கண் டநான்பார்த்தநனவுளநினைவுநீங்கிசாக்கிரத்திலுள்ளநினைப்புநீங்கிக்

கனவுகண்டதும் சொற்பனத்திற்பார்த்ததும் இரண்டுங்காணாத இவ்விருவத்தைகளின் றொழிலின்றிய சுழுத்திகண்டும் சுழுத்திசூனியத்தை பார்த்ததும் தினமனுபவித்தால் நாடோறு மனுபவிப்பதனால் ஒக்கும் தேவரீர் தேகியொன் றிருக்கின்றானென் றெளியதொவ்வும் தெரியவுமில்லை அதுபிரத்தியட்சமாகவுமில்லை சற்றே மனதினிலுதிக்கும் சற்றுமனதிற்றோன்றுகின்றது பின்னைமறைக்கும்பின் மறைக்கின்றது அதுஅலைதின்சுவரூபத்தை அருளுவீர் கிருபை செய்வீர்-எ-று. கண்டதென்பதுகண்டிமெனவும் மறையுதென்பது மறைக்குமெனவுந் திரிந்துநின்றன-இ-ம் தானென்பது தேகமென்று தேகியேவவத்தைகளை முன்னிட்டறிவிக்க வொருவாற்றானறிந்த சீனகுரு பின்மினிப்போலத்தோற்றிமறைதலின் தன் யதார்த்த சுவரூப மிக்கெனவிளங்க வனுக்கிரகிக்க வேண்டிக்கோடலாம்.-

அ-கை. முன்றேகாந்தரனாயிருந்தவனைக் கிஞ்சித்து விலட்சுப்படுத்திப்பின்நடத்த விலக்கணை பானமுன்பு சடமானதே விலக்கணங்கூறியவைதைநீக்கிப் பின்சித்தோரனான தேகியிலக்கணங்கூறத்தொடங்கல்.

தாலத்தின்மரங்கள்காட்டித் தனிப்பிறைகாட்டுவார்போ
லாலத்தினுடுக்கள்காட்டி யருந்ததிகாட்டுவார்போற்
றூலத்தைமுன்புகாட்டிச் சூக்குமசொருபான
மூலத்தைபின்புகாட்ட முனிவரர்தொடங்கினாரே.

இ-ள். தாலத்தின் பூமியின்கண்ணுள்ள மரங்கள்காட்டி தருக்களைக்காண்பித்து தனிப்பிறைகாட்டுவார்போல தனியானமூன்றாம் பிறையைத்தரிசிப்பவர்போல ஆலத்தினுடுக்கள்காட்டி ஆகாயத்தின் கண்ணுள்ளதாரகைகளைக்காட்டி அருந்ததிகாட்டுவார்போல் அருந்ததியைக் காண்பிப்பவர்போல தூலத்தைமுன்புகாட்டி தூலமாயுள்ளதத்துவங்களை முன்னேதரிசிப்பது சூக்குமசொருபமானது அணுவுக்கணுவான மூலத்தை காரணத்தை பின்புகாட்ட பின்றரிசிப்பிக்கமுனிவரர்தொடங்கினர் ஆசிரியராரம்பித்தார் எ-று. ஆலமென்பது ஆகுபெயர். ௨௫

இ-ம் போத மாகும்படி போதிக்குமரபு கூறினதாம்.

அ-கை. தானுகியசித்தைத் தனியேதரிசிப்பிக்குநிமித்தம் தன்னைச்சுகசீவபரமாகத் தோற்றுவிக்குமாரோபயுத்தியையும் அத்துவிதமான்கூடத்த பிரமமாகத்தோற்றுவிக்கு மபவாதயுத்தியையுங் கூறத்தொடங்கல்.

ட்டமுக்குணமும் இம்மூன்று குணங்களும் மூன்றுமொத்துளவெ னினும் மூன்றுகியொத்திருப்பவைகளாயினும்தம்முள் அவைகளுள் ஒருகுணமதிகமாம்இரண்டடங்கி யொருகுணம் விசேடித்து நிற்கும்-எ-று.

இ-உ-க-ம்வித்தைதவடிவானசீவர்கள் பந்தப்பட்டிருக்குந் தங்க ண்மறதியானவன் வியத்தத்திற்காலதத்துவமு முக்குணங்களும் வி யத்தமாயினவென்பதாம். ௩௰

அ-கை மற்றொருவகைசிருட்டியின்மரபுகூறத்தொடங்கல்.

ஒருவழியிதுவாமத்தை யொருவழிவேராச்சொல்வார்
மருவுமவ்வியக்தந்தானே மகதத்வமாகுமென்று
மருவமகதத்துவந்தா னகங்காரமாகுமென்றங்
கருவுகங்காரமூன்றுங் காட்டியகுணமாமென்றும்.

இ-ள். ஒருவழியிதுவாம் ஒருமார்க்க மிதுவாம் இத்தைஇதை யே ஒருவழி வேறுச்சொல்வார் மற்றொரு மார்க்கமாய்ச் சொல்வா ர்கள் அக்தெங்கனமெனின் மருவு மவ்வியத்தந்தானே பொருந்தி ய வவ்வியக்தமோ மகதத்துவமாகுமென்றும் மகதத்துவமாமென வும் அருண்மகத்துவந்தான் சொல்லிய மகத்துவமே அலங்கார மாகுமென்றும் அலங்காரதத்துவமெனவும் தருவகங்காரம் சருவா கியவகங்காரமே மூன்றுய்க்காட்டிய குணமாமென்றும் மூன்றுய்த் தெரிவித்த குணங்களாமெனவுஞ் சொல்லப்படும்-எ-று.

சுத்தசைதன்னியமான தன்னை யெதிரிட்டறியவுதயமானவறி வுக்கு முன்புண்டானமறதியே அவ்வியத்தமான பிரகிருதி யென வும் அவ்வறிவுபகிர்முக வன்முகமானவிடமே மகத்துவமெனவும் அதுதன்னிடத்துப் பிரதிபலமான ஆரோபத்தைநானென்பதேஅ கங்காரதத்துவமென அதனிரசசலமே சத்துவமெனவும் அதன்சு லனமேரசமெனவும் அதன் மக்கினமே தமமெனவுமுண்டானவுபத் சிருஷ்டியைத் தனுபவத்திற்காண்க. ௩௧

அ-கை. மேற்சொல்லியகுணங்களிற் சுகசீவபரவுற்பத்தியைக் கூறுவான்றொடங்கிமுன்னர்பரனுற்பத்தியைக்கூறுகின்றார்.

இக்குணங்களிலேவிண்போன்றிருக்குஞ்சிற்சாயைதோன்று
முக்குணங்களினுந்தூய்தாமுதற்குணமாயையாகு
மக்குணப்பிரமச்சாயை யந்தரியாமிமாயை
யெக்குணங்களும்பற்றுதோ னிமித்தகாரணமாமீசன்.

இ-ள்.இக்குணங்களில்இம்மூன்று குணங்களில்விண்போன்றுஆ காயம்போலயிருக்கும்நிரவயமாயிருக்கின்ற சிற்சாயைதோன்றும் சி ற்சாயைபிரதிபலிக்குமுக்குணங்களினு மூன்றுகுணங்களினும் தூய் தாமுதற்குணம் சுத்தமாகியமக்குணத்தும்மாயையாகும்மாயையாம்அக்குணம்

அந்தசத்துவத்திற் பிரதிபலித்த-பிரமச் சாயை-பிரமப் பிரதிபலனை மே-அந்தரியாமி-அந்தரியாமியாம்-மாயையெனக் குணங்களு... மாயா சம்பந்தமான வெந்தக்குணங்களும்-பற்றுமோன்-பற்றுமோன்-பற்றுதவினை-நிமித்தகாரணமீசன்-பஞ்சபூதபவுதிகமுதலிய சிருட்டிக்கு நிமித்தகாரணமாகிய வீசனும்-எ-று. ௩உ

அகை - ஈசன் காரணசரீர வுற்பத்தியையுஞ் சீவனுற்பத்தியையுங்கூறல.

ஈசனுக்கிதுசுழுத்தி யிதுவேகாரணசரீரங்
கோசமானந்தமாகுங் குணமிராசதமவித்தை
தேசறுமவித்தைநோறுஞ் சிற்சாயைசிவகோடி
நாசமாமுயிர்க்கப்போது நாமமும்பிராஞ்ஞனுமே.

இ-ள். ஈசனுக்கு-இவ்வீஸ்பரனுக்கு-இது-இம்மாயையோ சுழுத்திசுழுத்தியவத்தை யாம்-இதுவே-இஃதே-காரணசரீரம்-காரணசரீரமாம கோசமானந்தமாகும்-இதுவேயானந்தமய கோசமாம்-குணமிராசதம்ரசோகுணம்-அவித்தை-அவித்தையாம்-தேசறும் வித்தை சேசறும்விளக்கமின்றியவித்தைகடோறும் பிரதிபலித்த-சிற்சாயை ஞானப்பிரதிபலமே-சிவகோடி-சிவராசிகளாம்-நாசமாம்-பாவையுமிறந்தசுழுத்தியை யபிமானிக்கும்-உயிர்க்கு-சீவர்களுக்கு-அப்போது அவ்வவசரத்தில்நாமும்பிராஞ்ஞனும்-பெயர்பிராஞ்ஞனும்எ-று.

அ-கை சீவனதுகாரணசரீரவுற்பத்தியைக்கூறுகின்றார்.

அழுக்கொடுபற்றுஞ்சீவர்க் கதுவேயானந்தகோசஞ்
சுழுத்திகாரணசரீரஞ் சொன்னவிம்மட்டுமோக
முழுக்குணத்திரண்டால்வந்தால் மூலவாரோபஞ்சொன்னோம்
வழித்துருக்குமவாரோ வழியுநீமொழியக்கேளாய்

இ-ள். அழுக்கொடுபற்றும்-அவித்தையைச்சேர்ந்திருக்கின்ற-சீவர்க்கு சீவர்களுக்கு-அதுவே-அவ்வித்தையே-ஆனந்தகோசம்-ஆனந்தமயகோசமாம்-சுழுத்தி-அஃதே-சுழுத்திவத்தையாம்-காரணசரீரம்-அஃதேகாரணசரீரமாம்-சொன்னவிம்மட்டும்-சொல்லியவிதுபரியந்தம்மோகம்-மயக்கமாகத்தோற்றிய பிரகிருதியின் - முழுக்குணத்திரண்டால் வந்தமுழுதுமானசத்துவரசோகுணத்திரளுண்டான-மூலவரோபம்காரணசரீரவத்தியாசத்தை-சொன்னோம்-உரைத்தோம்-வழுத்திருக்குமவாரோபவழியும்சொல்லப்பட்ட சூக்குமசரீராத்தியாசமுண்டான மார்க்கத்தையும்-மொழிய-யாஞ்சொல்ல-நீகேளாய் நீகேட்பாய்-எ-று. ௩ச

சுத்தசைதன்னியச்சாயை அதனிடமாதலின்-அதனைப்பிரமகூடஸ்தரெனவும்அதுதுசத்துருவரசோகுணத்திற்றங்குதலில்அக்கு

ணங்களைமாயையவித்தையெனவும் அவற்றிற்பிரதிபிம்பித்தசாயை யாரோபமாதலின் அவற்றைச்சிவேஸ்வர னென்வும்-அம்மாயை யவி த்தைகள்மேல்விளையுக்குக்காரணமாதலின் அவைகளைக்காரண சரீரமெனவும்அவைகனிலனைத்துமடங்கிநிற்றலை-சுழுத்தியவத்தையெ னவும் அவைகளிலன்புற்றுநிற்றலை-ஆனந்தமயகோச மெனவும் அவைகளையபிமானித்து நிற்பவரை-அந்தரியாமி பிராஞ்ஞ னெனவுங் கொள்க(இ உ க ம்)சிவேஸ்வரவும்பத்கியும் அவர்களுக்குண்டான காரணசரீரவத்தியாசமுங்கூறினதாம்.

அ-கை-சிவேஸ்வரர்களுக்குச் சூட்சுமசரீரமுண்டான முறைமையைக்கூறுவான்றொடங்கி முன்புசத்திகளின் றோற்றமுரைத்தல்

ஏமமர்யாவிநோத விசனாருளினாலே
பூமலியுயிர்கட்கெல்லாம் போகசாதனமுண்டாகத்
தாமதகுணமிரண்டு சத்தியாய்ப்பிரிந்துதோன்றும்
வீமமாபூடலென்றும் விவிதமாந்தோற்றமென்றும்.

இ-ள். ஏமமாயாவிநோதமோகமாகியமாயைவிளையாட்டாக வுடையாசனருளினாலீஸ் வரனுடைய கிருபையினால்-பூமலியுயிர் கட்கெல்லாம்பொலிவு மிகுந்தசீவர்களனைவர்க்கும் போகசாதன முண்டேக-அநுபோகசாதனமுண்டாகும்பொருட்டுதாமதகுணம்தமோ குணமானது-வீமமாமூடலென்றும் பயங்கரமானவாவரணமெனவும்-விவித மாந்தோற்றமென்றும் நானாவிதமாகும் விக்ஷேபமெனவும் இரண்டுசத்தியாய்ப் பிரிந்து தோன்றும் இருசத்திகளாய்ப் பிரிந்து தோன்றும்-எ-று.

உயிர்கட்கெல்லாம் போகசாதனமுண்டாகவென்பதனாற் சீவர்கள்சமஷ்டியேயீஸ்வானாதலின்அவ்வீஸ்வரனுக்குங்கொள்க.

அகை. விட்சேபத்தியிற் றன்மாத்திரையான சூட்சும பூதவுற்பத்திகூறல்.

தோற்றமாஞ்சத்திதன்னிற் சொல்லியவிண்ணும்விண்ணிற்
காற்றதாங்காற்றிற்றீயாங் கனலிநீர்நீரின்மண்ணும்
போற்றுமிவ்வைந்துநொய்யு பூதங்களென்றுபேராஞ்
சாற்றுமற்றிவற்றிற்போக சாதனதனுவுண்டாகும்.

இ-ள். தோற்றமாஞ்சத்திதன்னில்விட்சேபசத்தியில் சொல்லியவிண்ணுப், சொல்லப்படுஞ்சத்தாதன்மாத்திரை யான வாகாயமுண்டாம்விண்ணில் அவ்வாகாயத்தில்காற்றதாம்பரிசதன் மாத்திரையானவாயு

வுண்டாம்காற்றில் அவ்வாயுவில் தீயாம்-ரூபதன்மாத்திரையானவக்கினியுண்டாம் கனலில் அவ்வக்கினியில் நீர்ரசதன்மாத்திரையானவப்புண்டாம் நீரில் அவ்வப்பில் மண்ணாம் கந்தன்மாத்திரையானபிருதிவியுண்டாம் போற்றும்போற்றப்பட்ட இவ்வைந்தும்இத்தன்மாத்திரைகளைந்தும் நொய்யபூதங்களென்றுபேராம்சூக்குமபூதங்களென்னுநாமங்களாம்-சாற்றும்சொல்லப்பட்ட இவற்றில்இத்தன்மாத்திரைகளில்போகசாதனைதனுவுண்டாகும் அனுபோகத்துக்குச்சாதனமான சூக்குமசரீரந்தோன்றும்-எ-று. ௯௬

அ-கை தன்மாத்திரையின்சத்துவகுணத்தில் அந்தக்கரணஞானேந்திரியவுற்பத்திகூறல்.

ஆதிமுக்குணமிப்பூத மடங்கலுந்தொடர்ந்துநிற்கும்
கோதில்வெண்குணத்திலைந்து கூறுணர்கருவியாகு
மோதியபின்னையைந்து முளம்பந்திரெண்டாஞான
சாதனமாமிவ்வேழுஞ் சற்குணம்பிரிவினாலே.

இ-ள், ஆதிமுக்குணம்-உண்டானமூன்றுகுணங்களும் இப்பூதமடங்கலும்இத்தன்மாத்திரைகளைந்திலும் தொடர்ந்துநிற்கும்கூடியிருக்கும்கோதில் குற்றமற்ற வெண்குலத்தில் சத்துவகுணத்தில்ஐந்துகூறுவிஷ்டியானவைந்துபங்கும் உணர்கருவியாகும் ஞானேந்திரியங்களாம் ஓதியபின்னையைந்தும்சொல்லப்பட்டசமஷ்டியானவைந்துபங்கும் உளம்பந்திரண்டாம் மனம்புத்தியெனவிரண்டாகும் சற்குணப்பிரிவினால் சத்துவகுணம்சமாதலால் இவ்வேழும் இந்தவேழும் ஞானசாதனமாம் அறிகருவிகளாம்-எ-று. ௯௭

அ-கை, தன்மாத்திரையின் ரசோகுணத்தில் வாயுகன்மேந்திரியங்களினுற்பத்திகூறல்.

இராசதகுணத்தில்வேறிட் டெடுத்தகூறைந்துமைந்தும்
பிராணவாயுக்களென்றும் பெருந்தொழிர்கன்மமென்றும்
பராவியபெயராமிந்தப் பதினேழுமிலிங்கதேசஞ்
சுராசுரர்நரர்விலங்காய்த் தோன்றியவுயிர்கட்கெல்லாம்.

இ-ள் இராசகுணத்தில் ரசோகுணத்தில் எடுத்தகூறைந்தும்எடுத்தோன்றாகவைத்தபங்கைந்து பிராணவாயுக்களென்றும்தனித்தனியேயெடுத்தபங்கைந்தும்பெருந்தொழிற்கன்மமென்றுபெரியக்கிரியைச்செய்யுக் கன்மேந்திரியங்களெனவும் பராவியபெயராம் பராவியநாமங்களாம்இந்தப்பதினேழும் இப்பதினேழுதத்துவங்களும் சுரதேவர்களும் அசுரர் அவுணர்களும் நரர்மனிதர்களும் விலங்காய்மி

ருகங்களுமாகிதோன்றிஉண்டானஉயிர்கட்கெல்லாம் சீவர்களனைவர்க்கும் இலிங்கதேகம் சூக்குமசரீரங்களாம்எ-று, சிலநூலாசிரியர்சூட்சுமதேகமிருபத்துநான்கு தத்துவமென்றதை இந்நூலாசிரியர்விடயமைந்தையும்ஞானேந்திரியத்திலடக்கியும் அகங்காரத்தையுஞ்சித்தத்தையுமனம்புத்தியி லடக்கியும் பதினேழாகக் கூறினா ரெனக்கொள்க.

இ-உ-க-ம் சீவேஸ்வரருக்குண்டான சூக்குமசரீரத்தியாசுங் கூறினதாம்,

(அ கை)சூக்குமதேகத்தினல்வருங்கற்பனமங்களைக்கூறல்.

இவ்வுடன்மருவுஞ்சீவர்க் கிலங்குதைசதனென்றாகு
மிவ்வுடன்மருவுமீசற் கிரணியகருப்பனாகி
மிவ்வுடலிரண்டுபேர்க்கு மிலிங்கசூக்குமசரீர
மிவ்வுடற்கோசமூன்று மிதுகனவவத்தையாமே.

(இ ம்) இவ்வுடல் இவ்வியஷ்டிசூக்குமதேகத்தை மருவுஞ்சீவற்குசேர்ந்தபிமானிக்குஞ் சீவனுக்கு இலங்குதைசதனென்றாகும் விளங்காநின்ற வபிமானிநாமத்தை சதனென்பதாம் இவ்வுடல் இச்சமஷ்டிசூக்குமதேகத்தைமருவுமீசற்கு சேர்ந்தபிமானிக்கின்ற ஈஸ்வரனுக்கு இரணியகருப்பனாகும் அபிமானி நாம்மிரணிய கருப்பனென்பதாம் இவ்வுடல்இச்சரீரம்இரண்டுபேர்க்கும் சீவேஸ்வரரிருவர்க்கும் இலிங்கசூக்கும சரீரம் சூக்குமசரீரமாம் இவ்வுடல் இச்சரீரத்துக்குக்கோசமூன்றும் பிராணமயமனோமயவிஞ்ஞானமயமெனக்கோசங்கண்மூன்றாகும் இதுசனவவத்தையாம் இதுசொற்பனவவத்தையாம் எ-று.

தன்மாத்திரைகள்சூக்குமாதலின் அவற்றைச் சூக்குமபூதமெனவும் அவற்றின்றடிப்பைச் சூக்குமதேகமெனவும் அதை யபிமானிப்பவர்களைஇரணியகருப்பன தைசதனெனவும் அக்தி பிரமனோராச்சியஞ்செய்தலைச் சொற்பனவஸ்தையெனவும் அக்துபிராமனபுத்திகளாகத்தன்னை வறைத்தலை கோசங்களெனவுங்கொள்க, ஈகூ

அ-கை பஞ்சபூதபௌதிகமானசகத்துற்பத்தியைக் கூறுவான்றொடங்கி யக்துண்டாகுதற்கேதுகூறுகின்றார்,

சூக்குமசகமிம்மட்டுஞ் சொல்லினோமிப்பாற்றால
மாக்குபாரோபந்தானு மடைவிளின்மொழியைக்கேளாய்
தாக்குதவ்வுயிர்க்குத்தூல தனுவும்போகமுமுண்டாகக்
காக்குமிவ்வீசன்பஞ்சீ கரணங்கள்செய்தான்றானே.

இ-ள்.சூக்குமசகம் சூக்குமசரப் பிரபஞ்சத்தை இம்மட்டும்-இதுபரியந்தம்சொல்லினோம்சொன்னோம் இப்பால்மேல் தூலமாக்குதூலபூதமுந் தூலதேகமுமுண்டாகும்ஆரோபந்தானும்அத்திரைத்

யும்அடைவினில் கிரமமாகமொழியக்கேளாய்-சொல்லக்கேட்பாய் காக்குமிவ்வுயிர்க்குசூக்குமசரீரத்திற்சேர்ந்திருக்கின்றவிச்சிவர்களுக்குத்தூலதனும் தூலதேகமும் போகமும் அனுபோகமும்உண்டாக உண்டாகும்படி காக்குமிவ்வீசன் சீவர்களைபோதுகாக்குமிவ்வீஸ்வரன் பஞ்சிகரணங்கள் பஞ்சிகரித்தலைசெய்தான் செய்தனன்-எ-று தனுவும்போகமுமென்ற வும்மையால் அண்டமும்புவனமுங்கொள்க.

அ-கை. பஞ்சிகரமும் அ பற்றிலாகியகாரியமுங்கூறல்.

ஐந்துபூதமும்பத்தாக்கி யவைபாதிநந்நான்காக்கி
நந்துதன்பாதிவிட்டு நாலொடுநாலுங்கூட்ட
வந்தனதூலபூத மகாபூத மவற்றினின்றுந்
தந்தனநான்காந்தூல தனுவண்டபுவனபோகம்.

இ-ள். ஐந்துபூதமும்பத்தாக்கி தமோகுணப்பங்காகிய சூக்குமபஞ்சபூதங்களைப் பத்துபங்குசெய்து அவைபாதி அவற்றிற்பகுத்த பாதியைநான்காக்கி ஒவ்வொன்றைநான்குநான்குசெய்துநந்துதன்பாதிவிட்டு கேடில்லாத்தன்மாசனமானபாதிநீக்கி நாலொடுமற்ற நான்கொடுநாலுங்கூட்ட நான்கையுஞ்சேர்க்கவந்த அதூலபூதம் தூலபூதமுண்டாயினமகாபூதமவற்றினின்றும் தூலமாகியவைகளினின்றும்தந்தன உண்டாக்கப்பட்ட அதூலதனுதூலசரீரமும் அண்டம்அண்டமும் புவனம்புவனமும். போகங்களுமாகியநான்குமாம் நான்காகும்-எ-று.

அண்டமென்பது பஞ்சபூதசமஷ்டியெனவும் புவனமென்பது அவைகளினுள்ளபதப்பிராவ்திஸ்தானங்களெனவுங்கொள்க.

இ-உ-க-ம்-சூட்சமபூதத்தைப் பஞ்சிகரித்துத் தூலபூதமுமவற்றிற்றூலசரீரமுதலியநான்குந் தோன்றினவென்பதாம். சக

அ-கை-தூலதேகத்தினுல் வருங்கற்பனு நாமங்களைக்கூறல்.

தூலமேமருவுஞ்சீவன் சொல்லியவிசுவனுகுந்
தூலமேயமருமீசன் சூழ்விராட்புருடனுகுந்
தூலமாஞ்சாக்கிரவத்தை சொன்னதோரன்னகோசந்
தூலகற்பனையீதென்று தொகுத்ததுமனத்திற்கொள்வாய்.

இ-ள். தூலமேமருவுஞ்சீவன் வியஸ்டிதூலதேகத்தைச்சேர்ந்தபிமானிக்கிறசிவனுக்கபிமானி நாம் சொல்லிய சொல்லப்பட்ட விசுவனுகும்விசுவனென்பதாம் தூலமேமருவுமீசன் சமஷ்டிதூலதேகத்தைச்சேர்ந்தபிமானிக்கின்ற வீஸ்வரனுக் கபி[illegible] நாமம்சூழ்விராட்புருடனுகும கருதாநின்ற விருட்புருடனென்பதாமதூலம்

இவையிருவருக்குந் தூலதேகமாம் சாக்கிரவவத்தை இவையிவ்விருவர்க்குஞ் சாக்கிரவவத்தையாம் சொன்னது சொல்லியவிது அன்னகோசமாம் இவ்விருவர்க்குமன்னமயகோசமாம் தூலகற்பனை யீதென்று தூலசரீரவத்தியாசமிதுவென்று தொகுத்தது தொகுத்துச்சொன்னதைமனதிற்கொள்வாய்மனதிலுணர்வாய்-எ-று.

கன்மாத்திரைமிசிரமானதைத்தூலபூதமெனவும் அதொருரூபமானதைத்தூலசரீரமெனவும் அதை அபிமானிப்பவர்களை விசுவன் விராட்டெனவும் அதினின்றுளதிரிட்டிறத்தலைச் சாக்கிராவவத்தையெனவும்அது தன்னமயமாதலின் அதனை அன்னமயகோசமெனவுங்கொள்க.

இ-ம்-அபிமானிநாமமுதலியவைகளுண்டானவத்தியாயங் கூறினதாம்.

அ-கை-சீவேஸ்வரர்களுக்குபாதியொன்றாயினவர்கள்பேதமறிவதெங்ஙனமென்றவினாவுக்குத்தரம்.

சீரியவீசனார்க்குஞ் சீவற்குமுபாதியொன்றே
லாரியகுருவேபேத மறிவதெப்படியென்றக்காற்
காரியவுபாதிசீவன் காரணவுபாதியீசன்
வீரியமிகுசமட்டி வியட்டியாற்பேதமாமே.

இ-ள். சீரியவீசனுக்கும் சிறப்பையுடைய வீஸ்வரனுக்கும் சீவற்கும்சீவனுக்கும் உபாதியொன்றேல் உபாதியொன்றானால்-ஆரியகுருவே ஆசிரியவாசிரியரே பேதமறிவதுசிவேஸ்வரென்கிறவேற்றுமையறிவது எப்படிஎன்றகால எவ்வாறென்பாயாகில் காரிவுபாதிகாரியவுபாதியுள்ள சீவன்சீவர்கள் வியட்டியால்வியட்டியினாலும் காரணவுபாதிக்கரணோபாதியுள்ளஈசன் ஈஸ்வரன் வீரியமிகுசமட்டிவீரமிகுந்தசமட்டியினாலும் பேதமாம் பேதமாகும் எ-று ௨௩

அ-கை இதுவுமது.

மரங்கள்போல்வியட்டிபேதம் வனமெனசமட்டிபேதஞ்
சரங்கடாபரங்கள்பேதந் தனியுடல்வியட்டி யன்பார்
பரம்பியவெல்லாங்கூட்டிப் பார்ப்பதுசமட்டியென்பா
ரிரங்கியபலசீவர்க்கு மீசற்கும்சலதமீதே.

இ-ள் மரங்கள்போல்தருக்களைப்போல் வியட்டிபேதம்வியட்டியின்பேதமாம் வனமெனல் வனமென்பதுசட்டிபேதம் சமட்டியின்பேதமாம்சரங்கடாபரங்கள சராசரவுயிர்களின் பேதம்பேதமானயுடல்தனிமையானதேகத்தைவியட்டியென்பாவியட்டியென்றுசொல்லுவார்கள்பரப்புவெல்லாங்கூட்டிவிரிந்ததூலதேகமுதலியவத்தையுஞ்சேர்த்துபார்ப்பது சமட்டியென்பார் காண்பது சமட்டியென்று

சொல்லுவார்கள் இரங்கியயிருங்கின்ற பலசீவர்க்கும் அனந்தசீவர்களுக்குமீசற்கும் ஈஸ்வரனுக்கும்-பேதமி நேபேதமிதுவாம்-எ-று.

இ-உ-க-ம்-சமட்டியினு லீஸ்வரனுக்குக்காரணோபாதியும் வியட்டியினுற் சீவனுக்காரியோபாதியுமாமென்பதாம். ௪௪

அ-ரை, அத்தியாரோ பவுத்தியினுற்றன்னிடத்தி லாரோபமாகத்தோற்றின சச்சிவாரங்களைக் கூறியவைகளுண்டானகிரமப்படிலயிப்பிக்கு மபவாத வுத்தியைக் கூறத்தொடங்கல்.

கற்பனையன்னவாறு காட்டினேம்காண்பமெல்லாஞ்
சொற்பனம்போலவெண்ணித் துணிந்தவன்ஞானியாவான்
சொற்புதைமழைக்காலம்போய்த் தெளிந்தவாகாயம்போல
வற்புதமுத்திசேரு மபவாதவழியுங்கேளாய்.

இ-ள். கற்பனைவந்தவாறு ஆரோபமான சிருஷ்டியுண்டான முறைய காட்டினேம்-அறிவித்தோம்-காண்பவெல்லாம் திரிகியமனத்தையும் சொற்பனம்போல்-கனவைப் போல எண்ணித்துணிந்தவன் கருதித் தெளிந்தவன்-ஞானியாவான்-அறிஞனுவான்-சொற் புதை மேக நிறைந்திருக்கின்ற-மழைகாலம்போய்-வருஷகால நீங்கி-தெளிந்தவாகாயம்போல சரற்காலத்திற் றெளிந்தவிண்ணைப் போல-அற்புதமுத்திசேரும்-அற்புதமான மோட்சமடையும்-அபவாத வழியுங் கேளாய் அபவாதமார்க்கத்தையுங்கேட்பாய்-எ-று. ௪௫

அ-ரை, அபவாத விலக்கணங்கூறல்.

அரவன்றுகயிலன்றற்போ லாளன்றுதறிபென்றற்போற்
குரவன்றனுபதேசத்தார் கூறுநூல்வெளிச்சங்கொண்டு
புரமன்றுபுவனமன்று பூதங்களன்றுஞானத்
திரமொன்றும்பிரமமென்றுந் தெளிவதேயபாவாதங்காண்.

இ-ள். அரவன்று-சர்ப்பமல்ல-கயிற்றென்னப் போல்-பழுதையென்பது போலவும்-ஆளன்றமகனன்று-தறியென்றற்போல்குற்றி என்பதுபோலவும்-குரவன்றனுப தேசத்தால்-ஆசிரியருப தேசமென்னுஞானக் கண்ணினுல்-கூறுநூல் தத்துவத்தை சொல்லும்ஞான சாத்திரங்களாகிய-வெளிச்சங்கொண்டு பிரகாசத்தைக் கொண்டு-புரமன்றுதேகமுதலிய தத்துவங்களன்று ஞானத்திர மென்றும் அவைகட்கதிட்டமான கூடஸ்த சைதன்னியமெனவும் புவனமன்று புவனங்களுமன்று பூதங்களன்று-பஞ்சபூதங்களுமன்று பிரமனென்றும் அவைகட்கதிட்டானமான பிரமமெனவும் தெளிவதே அனுபவமாய்த்தெளிவதே அபவாதங்காண் அபவாமாம்-எ-று.

லாதாரஞ்சமம்விசேட மாமெனவிரண்டுகூறு
மாதாரஞ்சமமாமெங்கு மாரோடம்விசேடமாமே.

இ-ள். ஆதாரமறைந்துபோனால் விம்பமறையுமானால் ஆரோப மெங்கேதோன்றும் பிரதிவிம்ப மெங்ஙனந்தோன்றும் ஆதாரமறை யாதாயின்-விம்பமறையவில்லையெனின் ஆரோபமில்லையே யென்று ல்பிரதிவிமயமில்லையேயெனின் ஆதாரம்ஆதாரமானதுசம்மவிசேட ம்ாமென சமமாமெனவும்விசேடமாமெனவும்இரண்டுகூறும்இரண் டுவகைபாம் சமம்சமமானது எங்கும்எவ்விடத்திலுமுள்ள ஆதார மாம்ஆதாரமாகும் விசேடம்விசேடமானதுஆரோபமாம் கற்பிதமா ம்-எ-று.

ஆதாரனமானசுத்தசைதன்னியம் பூரணமான கூடஸ்தபிமாக விளங்குமிடத்திற்சமமெனவு மதனிலுதயமான வறிவு சிவேஸ்வரச ததாகவிரிந்தொடுங்கிமி த்துவிசேடமெனவுமிங்ஙனமூதித் தொடுங் குமறிவுண்மையாயினுமக்கிரியைகண் மித்தையாதலி னவ்விசேடத் தை யாரோபமெனவுங்கொள்க. ௩௪

அ-கைஇ-து.

சகமதிலிதுவென்சுட்டாச் சமானக்கண்மறைந்திடாது
மிகவுரைகயிறும்பாம்பும் விசேடக்கண்மறைந்துபோகு
மகமெனுஞ்சமானந்தன்னை யஞ்ஞானமறைந்திடாது
பகர்வதோர்விசேடஞ்சிவன் பரனெனுமவரைமூடும்.

இ-ள். சகமதில்உலகத்தின்கண் இதுவெனசுட்டப்படாத-சமா னக்கண்-சமமாகியகண்கள் மறைந்திடாது ஒன்றுமறைக்க மறைப டாதுமிகவுரைகயிறும்பாம்பும் மிகவுஞ்சொல்லாநின்றபழுதை யுஞ் சர்ப்பமாகிய விசேடக்கண் மறைந்துபோகும் விசேடமாகத்தோன் றினவையொன்றுமறைக்கமறைபடும் அதனைப்போல்அகமெனுஞ்ச மானந்தன்னைதானென்னுங் கூடஸ்தபிரமத்தைஅஞ்ஞான மறைத் திடாது அறியாமையான வாவரணமறைக்கமாட்டாது பகர்வதோர் விசேடம் சொல்லப்பட்ட ஓர்விசேடமாகிய சிவன்பரனெனும் சிவே ஸ்வரனென்கிறஅவரைமூடும்-அவர்களை மறைக்கும்-எ-று சிவன்பர னெனும்வரைமூடுமென்றது அவர்களுணர் வையெனவும்அஞ்ஞான வறைத்திடாதென்றது ஆவரணமறைத்திடா தெனவுங் கானலிருக் குமிடத்துச் சலந்தோற்றுதலும் அக்கானலாய்ப் பார்க்கு மிடத்து தோற்றியுமில்லாததுபோல ஆதாரமிருக்குமிடத் தாரோபந் தோற் றுதலும் அவ்வாதாரமாய்ப்பார்க்குமிடத்தத்து தோற்றியு மில்லாத தே யரமெனவுங்கொள்க.

இ-ம்.ஆரோபமானசிவேஸ்வரரைத்தமக் காதாரமானகூடஸ்த பிரமத்தைப்பார்க்கவொட்டாம லவரதுணர்வையில்லாவரணமறை க்குமேயன்றி யாதாரத்தைமறைக்க மாட்டாதென்பதாம். ௩௫

அ-கை, அவ்வனர்வை மனமுதலாகத்தோன்றின விட்சேப காரிய மறைத்ததேயன்றி ஆவரணமெங்கே மறைத்ததெனல்.

கேவலநிலைதோன்றாமற் கெடுத்ததுபஞ்சகோசஞ்
சீவனுஞ்சகத்துமாகிச் செனித்தவிட்சேபமன்றோ
வாவரணந்தானேபாழ்நாத்த மென்றுரைத்ததேதோ
மேவருங்குருவேயென்று வினவினமகனேகேளாய்.

இ-ள். கேவலநிலைதோன்றாமல் முத்திநிச்சயந்தோன்றாமல்கெடுத்தது-அழித்தது-பஞ்சகோசம்-பஞ்சகோசமும் சீவனும் சிதாபாசனும் சகத்துமாகி உலகமுமாய் செனித்தவிட்சேபமன்றோ உண்டானவிட்சேபமல்லவா அங்ஙனமிருக்க ஆவரணந்தானே ஆவரணமே பாழ் பாழெனவும் அனர்த்தமென்று அனர்த்தமெனவும் உரைத்ததேது சொல்லியதென்னமே வருங்குருவே யென்று அடைதற்கரிய வாசாரியரே யென்று வினவினமகனே கேட்டமாணாக்கனே கேளாய் நீகேட்பாய்-எ-று.

ஆனந்தமய கோசமுஞ்சீவனும் விட்சேமகாரியங்களல்லாதனவாயிருக்கவங்ஙனங் கூறியதென்னையெனின் அந்தக்கரணப்பிரதிபலன் சீவனும் அவனறியாமையானந்த மயகோசமுமாதலா லிங்ஙனங்கூறிய தெனக்கொள்க. இ-ம், வெளிப்படை ௫௩

அ-கை, விட்சேபத்தினாலுண்டாகு நன்மையு மாவரண சத்தியினாலுண்டாகுந் தீங்கையுங்கூறுகின்றார்.

தோற்றமாஞ்சத்திதானே துன்பமாம்பலமாறாலு
மாற்றலான்முத்திசேர்வார்க் கனுகூலசகாயமாகு
மூற்றமாம்பகற்காலம்போ லுபகாரநிசியினுண்டோ [தே
மாற்றமென்னுரைப்பேன்மைந்தா மறைப்பதுமிகப்பொல்லா

இ-ள், தோற்றமாஞ்சத்திதானே விட்சேப சத்தியே துன்பமாம்பலமாறாலும் துன்பத்தைக் கொடுக்கின்ற தேக முதலியவைகளாறாலும் ஆற்றலான் முயற்சியினால் முத்திசேர்வார்க்கு வீடடைபவர்களுக்கு அநுகூலசகாயமாகும் அதுமிகவுஞ்சகாயமாம் ஊற்றமாம் அறிதற்குதவியாம் பகற்காலம்போல் திவாவைப்போல உபகாரம்சகாயமானது நிசியினுண்டோ இரவிலுளதோர் மாற்றமென்னுரைப்பேன் என்சொல்வேன் மைந்தா மகனேமறைப்பதுமூடுகின்ற வாவரணம் மிகப்பொல்லாதுமிகவும்பொல்லாததாம்-எ-று. ௫௪

அ-கை. இன்னுமதனை வற்புறுத்தல்.

சுழூத்தியிற்பிரளயத்திற் றோற்றமாஞ்சகங்கண்மாண்டு
மழூத்தியபவம்போய்முத்தியடைந்தபேரொருவருண்டோ
முழூத்தவிட்சேபமெல்லா முத்தியிற்கூட்டுகிற்குங்
கொழூத்தவாவரணமுத்தி கூடாமற்கெடுத்தகேடே.

இ-ள். சுழூத்தியில் நித்தியப்பிரளயமாகிய சுழூத்தியிலும்பிரளயத்திலும் பிரவப்பிரளயத்திலும் தோற்றமாஞ் சகங்கண்மாண்டு

ம் உண்டானவுலகமுதலியவை கணசித்தும் அழுத்தியபலம்போய் நாற்கதியிலமிழ்த்தியசனனநீங்கி முத்திவீட்டை அடைந்தபேர்பெற்றவர்கள் ஒருவருண்டோ ஒருவருளரோ முழுத்தவிட்சேபமெல்லாம் முழுதும் விட்சேபகாரியமனைத்தும் முத்தியிற் கூட்டுகிற வீட்டிற்சேர்க்கும் கொழுத்த அறியாமை மிகுந்த ஆவரணம்ஆபரணமானதுமுத்திகூடாமல் வீட்டைச்சேராமல் கெடுத்தகேடுகெடுத்த கேடாம்-எ-று ப-ம்மனோதியானுதியாற் பரமசுகத்தையடை தலின் விட்சேபமெல்லா முத்திமிற்கூட்டுகிற்குமென்றார்.

இ-உ-க-ம். முத்தியடைதற்கு அறிதலுள்ள விட்சேபஞ் சாதனமாமேயன்றி அறியாமையான வாபரணமாகாதென்பதாம.

அ-௯,மித்தையான விட்சேபசத்தியினால் வெளிப்பட்டு முத்தியுமித்தையேயாமெனி லங்ஙனமாகாதெனல்.

சுத்தியில்வெள்ளிபோலத் தோன்றியதோற்றமான
சத்தியும்பொய்யேயென்றார் சத்திசாதனமாவந்த
முத்தியும்பொய்யாமென்னின் மோகநித்திரைவிலங்கர்
னித்திரைதெளியுமாமோ னிருவாணநிலைமெய்யாமே

இ-ள். சுத்தியில்வெள்ளிபோல கிளிஞ்சிலி லதிதாரோபம் போலதோன்றிய உண்டான தோற்றமானசத்தியம் விக்ஷேபசத்தியும் பொய்யேயென்றால் மித்தையாயின் சத்திசாதனமாவந்த அச்சத்திசாதனமாகவுண்டான முத்தியும் வீடும்பொய்யாமென்னில்மித்தையாமெனின் மோகநித்திரைவிலங்கால் மோகமானசொர்ப்பனசிம்மத்தினால் நித்திரைதெளியுமாபோல்நித்திரை தெளிந்து சாக்கிரம்வருவதுபோல் நிருவாணிநிலை அச்சத்தியினாலுண்டாகு முத்திநிலையும்பொய்யாம் உண்மையேயாம்-எ-று.

இ-ள் மித்தையானசொர்ப்பனசிம்மத்தினால் உண்டானசாக்கிரஞ்சத்தியமானதுபோல மித்தையான விஷேக்ஷபசத்தியின் காரியமானதியானுதிகளாலுண்டான வீடும்சத்தியமேயாமென்பதாம். ௬௩

அ-௯க,இச்சத்திகளின்காரணமானமாயைகளை நீக்குமெதுகூறல்.

இம்பரினஞ்சைநஞ்சா லிரும்பினையிரும்பாலெய்ய
மம்பினையம்பாற்பற்று மழுக்கினையழுக்கான்மாய்ப்பார்
வம்பியணமாயைதன்னை மாயையான்மாய்ப்பார்பின்னைத்
தம்பமாயதுவுங்கூடச் சவஞ்சுடுகடிபோற்போமே.

இ-ள். இப்பரில்நஞ்சை சர்ப்பந் தீண்டின விஷத்தை நஞ்சால் ஔஷதமான விஷத்தினாலும் இரும்பினை அயத்தை இரும்பால்அரவயத்தினாலும் எய்யு மம்பினை விடு மம்பை அம்பால் அதற்குப் பகையான வம்பினாலும் பற்றுமழுக்கினை பிடித்த வழுக்கை அழுக்கால் அதை நீக்கு மழுக்கினாலும் மாய்ப்பார் கெடுப்பார்கள் அங்

னம்வம்பியன் மாயைதன்னை அசுத்தமாயையை மாயையால்சுத்த மாயையால்-மாய்ப்பர் கெடுப்பார்கள்-பின்னை பின்பு. தம்பமாமதுவும்பற்றுக்கோடான வச்சுத்தமாயையும்கூட அசுத்தமாயையோடுங் கூட சவஞ்சுடுதடிபோல பிரேதகனஞ்செய்யுந் தண்டமதனோடு வேவுதல்போலபோம் கெடும்-எ-று.

இ-ம். சகதரூபமான வசுத்தமாயையை சிதரூபமான சுத்தமாயையினாற்கெடுத்தவிடத்துதயமான பரஞானத்திற் சுத்தமாயையும் அசுத்தமாயையோடு கெடுமென்பதாம். ௫௮

அ-கை, ஆத்மாக்களுக்கிவ்விருவிதமானமாயைகளாற் சத்தாவத்தைகள் வருமாறு மவற்றினமமுங்கூறல்.

இந்தமாயையினால் சீவர்க்கேழவத்தைகளுண்டாகு
மந்தவேழவத்தைதம்மையடைவினின்மொழியக்கேளாய்
முந்தவஞ்ஞானமுடன் முளைத்தலகாணுவஞானஞ்
சந்ததங்கண்டஞானந் தழல்கெடல்குளிர்மையதால்

இ-ள், இந்தமாயையினால் இம்மாயையினால் சீவர்களுக்கு ஏழவத்தைகளுண்டாகும் சத்தாவத்தைகளுளவாம் அந்தவேழவத்தை தம்மை அவ்வேழவத்தையினமங்களை அடைவினில்கிரமமாகமொழியக்கேளாய் சொல்லக்கேட்பாய் முந்தவஞ்ஞானம் முன்னமஞ்ஞானம மூடல் ஆவரணமும் முளைத்தல்விக்ஷேபமும் காணுதஞ்ஞானம் பரோக்ஷஞானம் நித்தியபரோக்ஷஞானமும் பரோம் குளிர்மையாதல் தடையற்ற வானந்தமும்-எ-று.

அ-கை. அச்சத்தாவத்தைகளின்றன்மையைக்கூறல்

பிரமமாந்தனைமறந்த பேதமையேயஞ்ஞானம்
பரநிலைகாணேமென் று பகர்தவாவரணமுட
னரனொருகருத்தாற்சீவ னெனனல்முளைத்தறேற்றங்
குரவனவாக்கியத்தாற்றன்னைக்குறிக்கொளல்பரோக்ஷஞானம்

இ-ள். பிரமமாந்தனை பிரமஸ்வரூபமாகிய தன்னை மறந்த பேதமையே மறகதவறியாமையே அஞ்ஞானம் அஞ்ஞானமாம் பரநிலைபிரமநிலைகாணேமென்று இருந்தாற்காணேனென்று பகர்தல் சொல்லுதல் ஆவரணமூடல்மூடலென்றுமாவரணசத்தியாம் நானொருகருத்தால் புருடனேநினைப்பினால் சீவனெனனல் சிதாபாசனெனனல் முளைத்தறேற்றம்விக்ஷேபசத்தியாம் குரவன்வாக்கியத்தால் ஆசிரியருபதேசத்தினால் தன்னைக்குறிப்பாகத் தெரிந்துக்கொள்ளுதல் பரோக்ஷஞானம் பரோக்ஷஞானமானமாம்-எ-று. ௫௯

அ-கை-இது.

தத்துவவிசாரஞ்செய்து சகலசந்தேகமும்போ
யத்துவிதந்தானுதல் அபரோக்ஷஞானமாகுங்
கத்தனுஞ்சீவபேதங் கழிவதேதுக்கம்போதன்
முத்தனெயல்லாஞ்செய்து முடிந்ததானந்தமாமே.

இ-ள். தத்துவவிசாரஞ்செய்து தற்பததொம்பதம் விசாரித்து சகலசந்தேகமும்போய் எல்லாவையமுநீங்கி அத்துவிதந்தானுதல் கூடஸ்தபிரமவைக்கியமான வத்துவிதஸ்வரூபந்தானுக விளங்குதல் அபரோக்ஷஞானமாகும் அபரோக்ஷஞானமாம் கத்தனுஞ் சீவபேதம்அகம்பாவமான சீவேஸ்வரபேதம் கழிவதேநீங்கலே துக்கம்போதல்துக்கநிவர்த்தியாம் முத்தனுய் சீவன்முத்தனுய் எலலாஞ் செய்துமுடித்தது கிருதகிருத்தியமானது ஆனந்தமாம்தடையற்றவானந்தமாம்-எ-று. ௬௰

இ-உ-க-ம். அஞ்ஞான மாபரணமிரண்டும் அசுத்தமாயா சம்பந்தவிக்ஷேபம் பரோக்ஷ மிரண்டும் சுத்தாசுத்த மாயா சம்பந்தம் அபரோக்ஷமுதலிய மூனறுஞ் சுத்தமாயா சம்பந்தமாம் அவைகளில் அபரோக்ஷஞானத்தினல் பரோக்ஷமும் விக்ஷேபசத்தியின்காரியமான திரிஸ்யமும்துக்கநிவர்த்தியினுனுபரணமும் தடையற்றவானந்தத்தினனஞ்ஞானமுநீங்கும் அவைகணீங்கவேயிவைகளுமங்கஞ்நீங்கிநிரதிசயானந்தமாகத்தானே விளங்குமென்பதாம்.

அ-கை அச்சந்தாவத்தைபை விளக்குநிமித்தந் தசபுமான் றிட்டாந்தங்கூறல்.

இதுநினக்கறியும்வண்ணமிப்படியொருதிட்டாந்தம்
புதுமையாங்கதைகேள்பத்துப் புருடரோராற்றைநீக்கி
யுதகதீரத்திலேறி யொருவனென்பதுபேரெண்ணி
யதனுெடுதான்பத்தாளென் றறியாமன்மயங்கிநின்ருன்

இ-ள் இது நினக்கறியும்வண்ணம் இகதுனக்குத் தெரியும்படி இப்படி இவ்வண்ணம் ஒருதிஷ்டாந்திரம் ஒருதிட்டாந்தமாகபுதுமையாங்கதைகேள் வியப்பானவோர் சரித்திரங்கூறுவன்கேட்பாய்பத்துப்புருடர்பதின்மர் ஓராற்றைநீந்தி ஓரநதியைநீந்திஉதகதீரத்திலேறி நதிக்கரையிலேறிஒருவன் ஒருபுருடன்ஒன்பதுபேரைஎண்ணிஅதனேடு அவர்களோடும் தான்எண்ணின தான்பத்தாளென்றறியாமல்தசமனென்றுதெரியாமல் மயங்கிநின்ருன்பிரமித்துநின்ருன்-எ-று

அ-கை திட்டாந்த மாட்டாந்தங்களுக் கொப்புவமைகாட்டல்

அறியாதமயலஞ்ஞான மவனிலைக்காணுமென்றற்
பிறியாவாவரணமாகும் பீடைகொண்டழல்விக்ஷேப
நெறியாளன்றசமனுண்டு நிற்கின்ருனென்றசொல்லைக்
குறியாகவெண்ணிநோக்கிக் கொள்வதுபரோக்ஷஞானம்.

இ-ள், அறியாதமயந்தன்னைத் தெரியாதமயக்கமே அஞ்ஞானம் அஞ்ஞானமாம் அவனிலை அத்தாமனிலையைக் காணுமென்றல் இல்லாமையாற் காண்கிலோமெனல்பிறியாவாவரணமாகும் அறியா

ங்காதவாபரணம் பீடைகொண்டழல்-தசமனைக் காணேமென்றுது ன்பமுற்றலறல் விட்சேபமாம் நெறியாளன வழிச்சொல்வோனிவன் கருத்தைக்கண்டு சமனுண்டு பதின்மனுளன் நிற்கின்றானென்றசொ ல்லை இவ்விடத்திருக்கிறானென்று சொல்லியவசனத்தை குறியாக வெண்ணி குறிப்பாகநினைத்துநோக்கிக்கொள்வது அறிந்துகொள்வ துபரோட்சஞானமாம்-எ-று. ௯௨

இ-து.

புண்ணியபதிகன்பின்னும் புருடரொன்பதின்மர்தம்மை
யெண்ணியநீபத்தாவா னென்னவேதன்னைக்காணல்
கண்ணினிற்கண்டஞானங் கறைதபோவதுநோய்போத
றிண்ணியமனதிலையந் தெளிதலானந்தமாமே

இ-ள். புண்ணியபதிகன் புண்ணியவானான நெறிச்செலவோன்பி ன்னும் பின்பும் புருடரொன்பதின்மர்தம்மை பூமான்களொன்பது பெயரை எண்ணியநீஎண்ணினநீபத்தாவா னென்னவேதசமனாமெ ன்றுசொல்லவேதன்னைக்காணல் தன்னைத்தசமனைக்கண்டால்கண் ணிற்கண்டஞானம் அபரோக்ஷஞானமாம் கரைதல்போவது அழு கைநீங்கினது நோய்போதல துக்கநிவர்த்தியாம் திண்ணியமனதில் வ ன்மையானவுளத்தில் ஐயந்தெளிதல்சந்தேகந்தீர்த்தல் ஆனந்தமாம் தடையற்றவானந்தமாம்-எ-று.

இ-உ-க-ம் தசமன்றிட்டாந்தத்தினாற் றன்னைமறந்ததனால்வந் தவுபாதிகளையும் தத்தரிசனத்தில் வைகணிக்கத்தையும் கூறின ாம். ௯௩

அ-கை தசமன் தன்னைத்தானெனக்கண்டதுபோலத் தன்னை த்தானாகத்தரிசிப்பிக்கவேண்டுமென்றசீடனைநோக்கி மகாவாக்கியா ர்த்தநிரூபகத்தினாலத்துவிதமான தன்னை அறிவிக்கத்தொடங்கல்.

தெசபுமான்றனைக்கண்டாற்போற் றேசிகமூர்த்தியேயென்
னிசவடிவினையான்காண நீர்காட்டல்வேண்டுமென்றான்
சுசிபெறுமிலக்கியார்த்தந் தொம்பதந்தற்பதங்க
ளசிபதமைக்கியஞ்செய்யு மதிசெயவுண்மைகேளாய்.

இ-ள் தெசபுமான் பதின்மனானவன் தனைக்கண்டாற்போல்த ன்னைக்கண்டதுபோல தேசிகமூர்த்தியே ஆசாரியரேஎன்னிசவடிவி னைஎன்தத்துவஸ்வரூபத்தை யான்காண நான்றரிசிக்கும்படி நீர்கா ட்டல்வேண்டுமென்றுகேட்டான் தொம்பதந் தற்பதங்கள் நீயது வென்னும்பதங்களில் சுசிபெறுமிலக்கியார்த்தம் பரிசுத்தமானவில க்கியார் சுகமானகூடஸ்தபிரமத்தின் ஐக்கியம் ஐக்கியத்தை அசிப தம் ஆனாயென்னும்பதமானது செய்யும்காட்டும் அதிசயவுண்மை கேள் அற்புதமானவுண்மைகேள் அற்புதமான வுண்மையக்கேட் பாய்-எ-று.

அ-கை ஒன்றானசைதன்னியமே நான்குசைதன்யமாகத்தோ ன்றுமென்ல்.

விண்ணென்றேமாகவிண்ணென் றுமேகவிண்ணென் றும்பாரின்
மண்ணென்றகட விண்ணென்று மருவியசல்விண்ணென்று
மெண்ணுங்கற்பனைபோலொன்றே யெங்குமாம்பிரமீச
னண்ணுங்கூடஸ்தன்சீவ னான்குசைதன்னியமாமே

இ-ள் விண்ணென்றேஆகாரமொன்றே மகாவிண்ணென்றும்மகாகாயமெனவும் மண்ணென்றகடவிண்ணென்றும்மேகசலப் பிரதிவிம்பகாயமெனவும் மண்ணென்ற கடவிண்ணென்றும்மிருத்து வென்றகடாகாயமெனவும் மருவியசலவிண்ணென்றும்அதிற்பொருந்தியகடகலப்பிரதி விம்பாகாயமெனவும் எண்ணுங்கற்பனைபோலநினைக்கப்பட்ட கற்பிதத்தைப்போல ஒன்றேஏகமானசுத்த சைதன்னியமேஎங்குமாம்பிரமம்பூரணமான பிரமமெனவும் ஈசனஈஸ்வரனெனவும் நண்ணுங்கூடஸ்தனபொருந்திரகூடஸ்தனெனவும் சீவன்சீவனெனவும்நான்குசைதன்னியமாம்நான்குசித்துகள்ஆம்-எ-று. ௬௫

அ-கை ஆரோபசைதன்னியத்தை நீக்கியதிஸ்டானசைதன்னியத்தை யடையவேண்டுமெனல்.

பூச்சியவீசன்சீவன் புகல்பதமிரண்டினுக்கும்
வாச்சியமிலக்கியந்தான் மலமிலாப்பிரமமாதை
காய்ச்சியபாலினெய்போற்கலந்தோன்றுங்கடைந்தெடுக்கு
மாச்சியமென்னவுன்னை யறிந்துநீபிரிந்துகொள்ளே.

இ-ள், புகல்மகாவாக்கியத்திற் சொல்லும்பத மிரண்டினுக்கும் தற்பதந்தொம்பதமான விருபதங்கட்கும்வாச்சியம் வாச்சியார்த்தமானவை பூச்சியவீசன்சீவன் ஆரோபமான சீவேஸ்வரராம் இலக்கியந்தான் இலக்கியார்த்தமானது மலமிலாப் பிரமமாதமா நிர்மலமானபிரமகூடஸ்தராம் காய்ச்சியபாலில்காய்ச்சினபாலில்நெய்போலவெண்ணெயைப்போல கலந்தொன்றும் சடத்திற்சேர்ந் தொருமித்திருக்கின்றஉன்னையறிந்து ஆத்மாவைத்தரிசித்து கடைந்தெடுக்குமாச்சியமென்னகடைந்தெடுத்துருக்கியநெய்போல நீபிரிந்துகொள்நீயனுதமாவினின் றுபிரிவாயாக-எ-று.

இ-உ-க-ம். தற்பத்தொம் பதங்களின் வாச்சியார்த்தமானசீவேஸ்வரராரோபமெனக் கண்டவைகளை நீக்கியிலக்கியார்த்தமானகூடஸ்தபிரமவதிஷ்டானத்தை யொன்றாகக் காண்கிலதுவேயசிபதார்த்தமான சுத்தசைதன்னியமாமென்பதாம். ௬௬

அ-கை. தன்னைத்தரிசிப்பிக்கு நிமித்தந்தா னல்லாதவைகளைநியதிகளைதல்.

பிறிதெதப்படியென்றக்காற் பிணமாகுமுடலென்னு
மறிவினைக்கொல்லவேண்டுமைம்பூதவிகாரமன்றே
வெறியதோர்துருத்திமூச்சு விடுவதுபோலமூக்கா
லெறிபிராணனுநீயில்லை யிராசதகுணவிகாரம்

இ-ள். பிரிவதெப்படியென்றக்கால் அனாத்மாவை நீங்குவதெங்ஙனமெனின் பிணமாகுமுடல்-சவமாகின்றதேகம் ஐயம்பூதவிகாரம் பஞ்சபூதவிகாரமாதலால் நானென்றுமறிறனை அகுதை நானென்கின்ற வுணர்வை கொல்லல்வேண்டும்கெடுத்தல்வேண்டும்வெறியதோர் துருத்தி வெறுந்துறுத்தியானது மூச்சுவிடுவதுபோலகாற்றை விடுவதுபோல மூக்காலேறி பிராணனும் மூக்கினால்வீசும் பிராண வாயுவும்இராசதகுணவிகாரம் ரசோகுணத்தின் விகாரமாதலால் நீயல்லைநீயல்லை-எ-று. ௬௭

அகை இது.

கரணமாமனதுபுந்திகருத்தாவாமவையான்மாவோ
தரமுளவிரண்டுகோசஞ் சத்துவகுணவிகாரம்
வரமறுகனவானந்த மயனையுநானென்றோதே
விரவியதவமஞ்ஞான விருத்தினவிகாரமாமே.

இ-ள். கரணமாமனதுபுந்தி அந்தக்கரணமானமனமும் புத்தியும்கருத்தா அகம்பாவமுமாம் தரமுள பேதமுள இரண்டுகோசம் மனோமயகோசமும்விஞ்ஞானமயகோசமும் வரமறுகனவு திரமில்லாத சொர்ப்பனமும் சத்துவகுண விகாரம் சத்துவகுண விகாரமுமாம் ஆதலால்அவையான்மாவோ அவ்விரண்டுமாதமாவல்ல ஆனந்தமயனையும் ஆனந்தமயகோசனான சீவனையும் விரவிய பொருந்திய சுபரூபமான அஞ்ஞானவிருத்தியும் அவித்தியா விருத்தியினது விகாரமாதலால் நானென்றோதே ஆத்மாவென்றுகருகாதே-எ-று.

இஉ கம் தேகமுதல் அவித்தை பரியந்தமான மூன்றுதேகம் மூன்றவத்தை மூன்றபிமானியும் பஞ்சகோசங்களையுந் தான் அன்றெனநியதிகளைந்ததாம்.

அ-கை நியதிகளைந்தநீயவ்விடத்திலுள்ள சுத்தசைதன்னியத்தைத்தரிசித்து வாகும்பொருட்டுப் பஞ்சகோச விலக்ஷணனாவாயெனல்;

சத்தொடுசித்தானந்தஞ் சமந்திரஞ்சாட்சியேக
நித்தியம்வியாபியான்மா நீயதுவாயறிந்து
பொத்தொடுகடந்துக்காதிப் பொருந்துபேதங்களான
குத்திரபஞ்சகோசக் குகைவிட்டுவெளியிலாவாய்.

இ-ள். சத்தொடு சத்தும் சித்து சித்தும் ஆனந்தம் ஆனந்தமும் சமம் சமமும் திரம் திரமும் சாட்சி சாட்சியும் ஏகம் ஏகமும்நித்

தியம் நித்தியமும் வியாபி பூரணமுமாகிவிளங்குவது ஆன்மா ஆத்மஸ்வரூபமாமாதலால் நீயதுவாய் கூடஸ்தனே பிரமம் கூடஸ்தனெனவத்து விதஸ்தமீபமாக அரிந்து தரிசித்து பொத்தொடு சடந்துக்காதிஅனுநசடதுக்க முதலியவற்றை பொருந்துபோதங்களாண அடையாகின்ற வேறுபாடுகளுள்ள குத்திரபஞ்சகோசக் குகை விட்டு வஞ்சகமானபஞ்சகோசமாகிய தேகத்தைநீங்கி வெளியிலா வாய்வெளிப்படுவாய்.

இ ள் பஞ்சகோசங்களைக் கண்டவைகட்கு விலட்சண னுவாயென்பதாம்

அ கை விலட்சணமான விடத்தைப் பார்த்திவ் விருளோ நானெனவினுதல்.

பஞ்சகோசமும்விட்டப்பாற் பார்க்கின்றபோதுபாழே
விஞ்சியத்துவல்லாமல் வேறொன்றுதெரியக்காணே
னஞ்சனவிருளோயோநா னகமெனவனுபவிப்பேன்
வஞ்சமில்குருவேயென்ற மகன்மதிதெளியச்சொல்வார்.

இ ள், பஞ்சகோசமும்விட்டு ஐந்துகோசமான மூன்றுதேகத்தையுநீங்கி அப்பால்மேல் பார்க்கின்றபோது பார்க்கும்பொழுது பாழே விஞ்சியது சூனியமே சேஷித்திருக்கின்றது அதுவல்லாமல் அச்சூனியமேயன்று வேறொன்றும் மற்றொன்றும்தெரிய தோன்றகாணேன்பார்க்கிலேன் அஞ்ஞானவிருளை யோகரியவந்தகாரத்தை நான்யான் அகமெனவனுபவிப்பேன் நானென்றனுபவிப்பேன்வஞ்சமில்குருவேயென்றஉண்மையான வாசாரியரேயென்றுகேட்டமகன் மதிதெளியசீடனறிவுதெளியும்படிசொல்வார்போதிப்பார் எ று அஞ்சனெனவிருளென்பது பிரகிருதியெனக்கொள்க.

இ ம் நியதிகளைந்தானிருக்க தனைக்காணுமல் நியதிகளைப்பட்டவரைக்கடோற்றுமைவியத்தான்றோற்றவில்லையெனக்கலங்கிவினுவினதாம்.



இ கை பிரகிருதியை நீங்கிச் சுத்தசைதன்னியனை தன்னைத் தரிசிப்பிக்கும் பொருட்டிருளைக்கண்டவன்பாழா அவனே நீயெனக்காண்பாயெனல்,

முன்புகறசமன்புத்தி மோகத்தாலெண்ணியெண்ணி
யொன்பதுபேரைக்கண்ட வொருவனுந்தனைக்காணுதை

பின்பவனிடையிற்கண்ட பெரியபாழவனேபார
யன்புளமகனேகாண்பதடங்கலுங்காண்பாநீயே.

இ-ள் முன்புகரசமன் முன்சொல்லிய பதின்மூனவன் புத்திமோகத்தால்-புத்திமயக்கத்தினால். எண்ணியெண்ணி நினைத்து நினைத்து ஒன்பதுபேரை-ஒன்பதுபெயர்களை கண்டவொருவனுந் தன்னைபார்த்தவொருவனுகிய தன்னைகாணுகபின்பு பாராதபின் அவனிடையிற்கண்ட தன்னிடத்திலே தன்னைத்தசமனுகப் பார்த்த அவனே அவனுபெரியபாழ்-பெருப்பாவபாராய் பார்ப்பாய் அன்புளமகனே அன்புள்ளபுத்திரா காண்பதடங்கலும் சூனியமுதலிய திரிஸ்யங்களனைத்தையும் காண்பவனீயேயாவாய்-எ-று.

இ-ம் அவவிருளாகியவறியாமை நீயன்றதனைக்கண்ட ஞானமேநீயெனவறிவித்ததாம். ௭௧

அ-கை அங்ஙனம்திஷ்டான சைதன்னியமான தனது சந்நிதியிற் சகலமுமுதித்தொடுங்குமெனல்.

தூலசூக்குமமஞ்ஞானந்தோன்றுமூன்றவத்தைதாமுங்
காலமோர்மூன்றுஞ்சன்மகடலெழுங்கல்லோலங்கள்
போலவேவந்துவந்துபோனவெத்தனையென்பேனே
னாலமர்கடவுளாணையவைக்கெலாஞ்சாட்சிநீயே.

இ-ள். தூலசூக்குமமஞ்ஞானம் தூலசூக்கும காரணமாகிய சரீரத்திரவியங்களும் தோன்றுமூன்றவத்தை நாளும்தோன்றுநின்ற சாக்கிரசொர்ப்பன சுழுத்தியென்னு மவத்தாத்திரியங்களும் அவற்றையபிமானிக்கிர விசுவதை சதபிராஞ்ஞனுமான வபிமானத்திரவியங்களும்காலமே மூன்றும் திரிகாலங்களும் சன்மம்பவமாகியகடலெழும்சாகரத்திலுண்டான கல்லோலங்கள் போலவே பேரலைகளைப் போலவே வந்துவந்து உண்டாகியுண்டாகி போனது அழிந்தன நான்யானெத்தனையென்பேன் எவ்வளவென்று சொல்வேன் ஆலமலர்கடவுளாணைகல்லாலினிழலில் வசிக்குஞ் சற்குருவின்பேரிலாஞ்ஞைப்படிக்கு அவைக்கெலாம்அவைகளனைத்திற்கும் சாட்சிநீயேநீயேசாட்சியாகும் எ-று.

இ-ள். ஆரோபமான வவித்தைமுதலியவைகளினேகதேசமும் அவைகட்கதிஷ்டானமான வாதம் ஞானவியாபகத்தையுந் தெரிவித்ததாம். ௭௨

அ-கை அவ்வாதம்ஞானத்தைத்தவிர மற்றோர்ஞான மன்றென்பதையுறுதிப்படுத்து நிமித்தந்தன்னையறிவது தானேயெனல்,

எல்லாங்கண்டறியுமென்னையெதுகொண்டறிவேனென்று
சொல்லாதேசுயமாஞ்சோதிச்சாருக்குசுடர்வேறுண்டோ
பல்லார்முன்றசமன்றனைப்பார்ப்பதுந்தனைக்கொண்டேவா
னல்லாதுபதினொன்று மவனிடத்துண்டோபாராய்.

இ-ள் எல்லாம் அனைத்தையும் கண்டறியுமென்னைபார்த்தறிகின்றவென்னை எதுகொண்டறிவேனென்று எதைக்கொண்டறிவேனென்று சொல்லாதேஉரையாதே சுயமாஞ்சோதி சுயஞ்சோதியான சுடருக்கு பிரகாசத்தை யறிவிப்பதற்கு சுடர்வேருண்டோ பிரகாசமறுமுளதோ பல்லார்முன்-பலர்முன்னர் தசமன்றன்னை-பதின்மனை பார்ப்பதும்-காண்பதும் தனைக்கொண்டே தானல்லாது தன்னைக்கொண்டேயன்றி பதினொன்றும்-பதினோராம்புருடனும்அவனிடத்து-அத்தசமனிடத்துஉண்டோபாராய்உளனோபார்ப்பாய் எ-று

இ-ய் ஆத்மசைதன்னியமொன்றேயென்றறிவித்ததாம் எ௬

அ-கை சர்வஞ்ஞசத்துவ கிஞ்சிஞ்ஞத்துவத்தையும் அறிவறியாமையையும்நீக்கிச் சுத்தசைதன்யத்தைத் தரிசிப்பித்தல்.

அறிவுக்குமறிவுசெய்யுமறிவுவேறுண்டென்றெண்ணி
மறிவற்றகுதர்க்கமூளாக்கனவத்தைபலராய்த்தீரு
மறிபடும்பொருணீயல்லை யறிபடப்பொருணீயல்லை
யறிபொருவாகுமுன்னையனுபவித்தறிவாய்நீயே.

இ-ள்,அறிவுக்கும் சுயஞ்சைதன்யத்துக்கும் அறிவுசெய்யுமறிவு அறிவுக்குஞானம் வேறுண்டென்று மற்றொன்றிருக்கிறதென்று எண்ணும் நினைக்கின்ற அறிவற்ற குதர்க்கமூடர்க்கு-உணர்வின்றியகுதர்க்கஞ்செய்யு மஞ்ஞானிகளுக்கு அனவத்தை-அனவஸ் தாதோஷம் பலமாய்த்தீரும பிரயோசனமாய்முடியும் அறிபடும் பொருணீயல்லை-திரிசியவஸ்துக்களுநீயல்லை அறிபடாப் பொருணீயல்லை-அறியாமையான சூனியவஸ்துக்களு நீயல்லை அறிபொருளாகு முன்னை சைதன்ய வஸ்துவான உன்ஆத்மஸ்வரூபத்தை-நீயே நீஅனுபவித்துணர்வாய்-எ-று.

இ-ம். துவிதமாகிய பாவுணர்வைநீக்கி யத்துவிதமான பாவுணர்விதுவென வுணர்த்தியதாம். எ௭

அ-கை அப்பரவுணர்வே தானாகிவிளங்கிய சிதானந்தமே சர்வமாக விளங்குகின்றதென வுணர்த்துதல்.

மதுரமாங்கட்டிசுட்ட மாய்ப்பணியாரமெல்லா
மதுரமாக்கியவதற்குமதுரந்தான்சுபாவமென்றே

வத்துவிதுவெனஞ்சடங்கி ளறிவாகவறிவைத்தந்தே
யதுவிதுவிரண்டுமாகா வகம்பொருளறிவாய்நீயே.

இ-ள். மதுமாங்கட்டி-தித்திப்பாகிய கருப்புக்கட்டிசேர்த்துசுட்ட-சுடப்பட்டமாப்மணியார மெல்லாம்-மாப்பலகாரங்களந்தனையும் மதுரமாகிய-மதுரமாகச்செய்த அதற்குஅவ் வெல்லங்கட்டிக்கும்தூரந்தான்-மதுரமான துசுபாவமன் றோசுபாவமல்லவா| அதுவென்னுஞ்சமஷ்டியும்-இதுவென்னும் வியஷ்டியுமான சடங்கள் திரியவஸ்துகக்ளை அறிவாகஞானமாக அறிவைத்தந்து ஞானதிஷ்டியைக் கொடுத்து அதுவிதுவிரண்டுமாக சீவேஸ்வர துவிதமாகாத அகம்பொருள் தாருகிய வத்துவிதவஸ்துவைஅறிவாய் நீயே - தரிப்பாய்-எ-று.

இ-ம். தன்தமசத்தந்தவிர வேறொன்றுமில்லையெத்தனதுவியாபகத்தை விளக்கியதாம். எறு

அ-கை. இவ்வத்துவிதநிலை சித்திக்கும்பொருட்ட திஷ்டாந்தத்துகக்கைக்கியமேயன்றி யாரோபத்துக்கைக்கிய மின்றெனல்.

இந்தநீதொம்பதத்தி னிலக்கியப்பொருளாமென்றும்
பந்தமிற்பிரமமேதற் பதந்தனிலிலக்கியார்த்த
மந்தமாஞ்சீவநீத னவாகளேவாச்சியார்த்தஞ்
சந்ததம்பேவமாவார் தமங்கைக்கியங்கூடாதே

இ-ள். இந்தநீ - இத்தன்மையுள்ளகூடஸ்தனுனநீயே தொம்பத்தின்-தொப்பதத்தினுடைய இலக்மயப்பொருளாம்லட்சியார்த்தமாம்என்றும்எப்போதும் பந்தமிற்பிர்மமே மாயாரகித மானபிரமமென்னும் மதுவே தற்பதந்தனில்-தற்பதத்தினுடைய இலக்கியார்த்தம்-லட்சியார்த்தமாம் அந்தமாம்-தோற்றி நசிப்பதான சிவநீசனவர்களே சீவேஸ்பரரானவர்களே வாச்சியார்த்தமாம் வாச்சியார்த்தமாம் சந்ததம் எப்பபாதும் பேதமாவார்தமக்குபேதமாகிய சீவேஸ்வரர்களுக்கு ஐக்கியங்கூடாது ஏகமாதற்கூடதாம்-எ-று.

பேதமாவார்க்கைக்கியங் கூடாதென்றவதனுல்அபேதமாவார்க்கைக்கியங்கூடுமென்ருயிற்று (இ-ம்) மகாவாக்கியத் தினிலக்கியார்த்தமான கூடஸ்தபிரமம் அபேதமாகவிவர்கட் கைக்கியங்கூடுமென்பதாம்

அ-கை-இ-து.

பேதமானதுவுங்கோளாய்ப் பேராலுமிடங்களாலு
மோதருமுபாதியாலு முடலாலு முணர்விறுலும்

பாதலம்விசும்பும்போலப் பலதரமகன் றுநிற்பா
ராதலாலிவர்க்கென்ஞான்றுமைக்கியமென்பதுகூடாதே

இ-ள். பேதமானதுவும் பேதமென்பதுவும் கேளாய்-கேட்பாய்பேராலும்-சீவேஸ்வரரென்ன நாமங்களினாலும் இடங்களாலும் அண்டபிண்டங்களாயிருக்கின்ற ஸ்தானங்களினாலும்ஒதருமுபாதியாலும்சொல்லுதற்கரிய காரணகாரியமான வுபாதிகளினாலும் உடலாலும் சமஷ்டியாகிய தேகங்களினாலும் உணர்வினாலும் சர்வஞ்ஞத்வேகிஞ்சிஞ்ஞத்துவமென்னுஞானத்தினாலும் பாதாள விசும்புபோலபாதாளமும் விண்ணுலகும்போலபலதரம்-நாநாவிதத்தினாலும் அகன்றுநிற்பாராதலால்நீங்கிநிற்பார்களாதலால்இவர்க்குஇத்தன்மையுள்ள சீவேஸ்வரர்களுக்கு எந்நாளும்எப்போதும்ஐக்கியமென்பது கலத்தலென்பது கூடாது கூடாதாம். -எ-று.

இ-ம். மகாவாக்கியத்தின் வாச்சியார்த்தமான சீவேஸ்வரரிவ்விதம்பேதமாதலினவர்கட்கைக்கியங்கூடாதென்பதாம். எஎ

அ-கை மகாவாக்கியார்த்தப்படி கூடஸ்தபிர்ம மேகமென்னும் பொருடோன்ற மூவிதவிலக்கணையைக் கூறுகின்றார்.

வடநூலவல்லவர்கள் சொல்லும்வாசகப்பொருள்சேராம்
லிடராகிற்பொருளாம்வண்ண மிலக்கணையுரையார்கொள்வர்
திடமானவதுவுமூன்றாச் செப்புவார்விட்டதென்றும்
விடலிலாதென்றும்விட்டு விடாததென்றும்பேராமே.

இ-ள். வடநூல்வல்லவர்கள் கிரந்தகர்த்தாக்கள் சொல்லும் சாஸ்திரங்களிற் சொல்லாநின்ற வாசகப்பொருள் வாச்சியார்த்ததினால் சேராமல் பொருள்பொருந்தாமல் இடராகின் தடையாயின்பொருளாம்வண்ணம்-அந்தமாகும்பொருட்டு இலக்கணவுரையால்இலக்கியார்த்தத்தினால்-கொள்வார்பொருள்கொள்வார்கள்திடமாக-திரமாக அதுவும்அவ்விலக்கணையையும்மூன்றாச்செப்புவார் மூன்றுவிதமாகச்சொல்லுவார்கள் விட்டதென்றும்விட்டவிலக்கணை யெனவும்விடலிலாதென்றும் - விட்டுவிடாதவிலக்கணையெனவும்பேராம்நாமங்களாம்-எ-று. எஅ

இ-ம் இலக்கணையினாமங்களைக் கூறினதாம்.

அ-கை அவற்றிற்குகாரணங்கூறல்

கங்கையிற்கோழுமென்றுங் கருப்புச்சேம்போடுதென்றும்
தங்கியசோயந்தேவ தத்தனென்றுஞ்சொல்வார்க

விங்குதாரணங்களாக்கி யிந்தமூன்றுரைகளாலே
துங்கநூல்விரோதமான சொல்லெலாம்பொருளாந்தானே.

இ-ள். தகையிற்கோஷமென்றும் பாகீரதியிலிடைச்சேரியுய்வன வும் கறுப்புச்சேப்போடுதோன்றும் கருமை செம்மைகள்செல்லு கின்றனவெனவும் தங்கிய தங்காநின்றசோயம் அவனே யிவனை தேவதத்தனென்றும் தேவதத்தனென்னுமோர் புருடனெனவும் சொல்வார்கள் உரைப்பார்கள் இங்கு-இவ்விடத்து உதாரணங்களா க்கி உதாரணங்களாகக்கொண்டு இந்த மூன்றுரைகளால் இம்மூன் றிலக்கணைப் பொருள்களினுல் துங்கநூல் மேலானசாஸ்திரங்களில் விரோதமான - அர்த்தம் பொருந்தாமல்வேறுபடுகின்ற சொல்லெ லாம் வாக்கியங்க ளனைத்தும் பொருளாம் அருத்தமாம்-எ-று.

ப-ம் கங்கைக்கணிடைச்சேரியென்னுமிடத்து கங்கையினிட த்திடைச்சேரியிருக்குமா அதன்கரையிலிருக்குமென்றகுதை விட் டு குதைக்கொள்வது விட்டவிலக்கணை யென்பார் கங்கையிற் கோ ஷமெனவும் கருமைசெம்மை செல்லுகின்றனவென்னு மிடந்தவை கடனிமேசெல்லும் கருமைநிறமாகிய பசுவும் செம்மை நிறமாகிய குதிரையுஞ் செல்லுகின்றனவென்றந்நிறத்தைவிடாமல் அம்மாவை க்கொள்வது விடாதவிலக்கணையென்பார் கறுப்புச்சேப்போடு யெ னவும்-அவ்விடமுமக்காலமுமவ்வேடமுமுள்ளவனே இவ்விடமுமி க்காலமுமிவ்வேடமு முள்ளவிவனென் அவைகளை நீக்கி யிப்புரு டனை மாத்திரங்கொள் நும்போது அவ்விடமுதலானவைகணீங்கி யிருப்புடன் மாத்திர மிருக்கின்றதை விட்டுவிடாத விலக்கணையெ ன்பார் தங்கியசோயந் தேவதத்தனெனவும் இவ்விலக்கணுவாக்கிய ப்படி பொருள்கோடலே நூல்களனைத்தினுமுள்ள அவிரோதமான பொருள்கோடலென்பார் இந்தமூன்றுரைகளாலேதுங்க நூல்விரோ தமான சொல்லெலாம்பொருளாமெனவுங் கூறினர்.

இ-ம் தொம்பதார்த்தத்தைவிட்ட விலக்கணையாற்றரிசிக்கவே ண்டுமென்பது தூலமுதல் விந்தைபரியந்தமான சரீரத்திரயக்களை விட்டு அவைகட்கு விலக்ஷணமான கூடஸ்தசைதன்யத்தைத்தரிசி சிப்பதும் தற்பதார்த்தத்தைவிடாதவிலக்கணையாற் றரிசிக்கவேண்டு மென்பது சைதன்யம் ஆனந்தானுபூதியின்றி விளங்காமையால் இ ச்சைதன்யத்தை விடாமலானந்தோப்பிரமத்தைத் தரிசிப்பதும் அசிபதார்த்தத்தை விட்டுவிடாத விலக்கணையாற்றரிசிக்க வேண்டு மென்பது. ஆனந்தமின்றியறிவும் அறிவின்றியானந்தமுமின்மையா

ல் அவைகளின் பேதமானது விதத்தைவிட்டு அபேதமான அத்து விதவஸ்துவை விடாமற்றறிசிப்பதுமாம். எகூ

அ-கை-இ௲.

பன்னியசோயமென்னும் பதங்களின்வாய்ச்சியார்த்த
மன்னியதேயங்காழ மவனிவனென்பவெல்லாஞ்
சொன்னவிவ்விரோதம்விட்டுத் தொகையிலக்கியம்விடாம
லுன்னிடற்றேவதத்த னொருவனைவெளியாக்காட்டும்.

இ-ள். பன்னிய முன்சொன்ன சேயமென்னும் அவனேயிவ னென்னும் பதங்களின் பதங்களுக்கு வாக்கியார்த்தம் வச்சியார்த் தமானது அனிய-வேறான-தேயம்-தேசமும் காலம்காலமும் அவனி வனென்ப அவனிவ னென்பனவாக சொன்ன சொல்லப்பட்டஇவ் விரோதமெல்லாம்-விரோதமாயுள்ள வில்வனத்தையும்விட்டு விடுத் து தொகையில்முடிவில் இலக்கியம் விடாமலுன்னிடல் இலக்கியா ர்த்தத்தைவிடாமற் சிந்திக்கில்தேவதத்தனொருவனைதேவதத்தனெ ன்னுமொரு புருடனையேவெளியாக்காட்டும் பிரத்தியக்ஷமாகக்கா ண்பிக்கும்-எ-று.

இ-ம். இவ்விலக்கணையின் பொருளொருமையை நன்றாகதெ ரிவித்தாம். அ௰

அ-கை இத்திஷ்டாந்தப்படி தாஷ்டாந்தத்தைவிளக்குதல்.

தத்துவப்பதங்டாமுஞ் சாக்ஷியாய்பிரமமான
வத்துவைவிடாமற்பேத வாச்சியார்த்தத்தைவிட்டு
நித்தமுமதுநீயாகு நீயதுவாகுமென்னு
மர்த்தமுமகண்டமென்னே யசிபதவைக்கியங்காட்டும்.

இ-ள். தத்துவப்பதங்டாமும்தற்பதந்தொம்பதங்களின்பேத வாச்சிடார்த்தத்தைவிட்டு வாச்சியார்த்தமானபேதமாயுள்ளசீவேஸ் வரரைவிட்டுசாக்ஷிபாய்ப்பிரமமானகூடஸ்பிரமமானவைத்துவை வி டாமல் பொருளைவிடாமல்நித்தமும்எப்போதும் அதுநீயாகும்பிரம மேகூடஸ்தனும்நீயதுவாகுமென்னும்கூடஸ்தனே பிரமமாமென்னு ம் அர்த்தமும்பொருளும்அகண்டமென்றலென்றென்று அசிபதம் ஆ னுயென்னும்பதமானதுஐக்கியங்காட்டும் அத்துவிதத்தைவிளக்கும்என்

இ-ள். ஆசிரியருபதேசப்படி யாரணநிட்சயமிருப்பது கொன்றாதலின்முடிவான மகாவாக்கியத்தினிலக்கியார்த்தமான கூடஸ்தபிரமத்திஞெருமையையுணர்த்தியதாம்.

அ-கை. இவ்வத்துவிதமானசுவானுபூதியேதானாக விளங்குவாயெனல். அக

கடநீரின்மேகநீரிற் கண்டவானிரண்டும்பொய்யே
குடவானும்பெரியவானுங் கூடியொன்றுமெப்போது
மிடமானபிரமஞ்சாக்ஷி யிரண்டுமெப்போதுமேகந்
திடமாகச்சுவானுபூதி சிவோகமென்றிருந்திடாயே.

இ-ள். கடநீரில்கடசலத்திலும்மேகநீரில்மேகசலத்திலும் கண்டவான்தோற்றுகின்ற பிரதிவிம்பாகாயமான இரண்டுபொய்யே இரண்டுமித்தைதயேயாம் குடவானும் கடாகாயமும்பெரியவானும் மாகாயமும்எப்போதுமெக்காலமும் கூடியொன்றும் கலந்தேகமாகும்அதுபோலஇடமானபிரமம் வியாபகமானபிரமமும்சாக்ஷி கூடஸ்தனுமான இரண்டும் இரண்டுசைதன்னியமும் எப்போதும் எக்காலமும்ஏகம் ஒன்றேயாமாதலின் திடமாகஸ்திரமாக சுவானுபூதிசுவானுபூதியாகிய சிவோகமென்று சிவோகமென்றும் இருந்திடாய் இருப்பாய்-எ-று.

இ-ம். சுருதிகுருவாக்கியார்த்த மொன்றுபட்ட வத்துவிதமானசுத்தசைதன்யமேதானாக விளங்குவாயென மௌனநிலையையுணர்த்தியாசிரியர்மௌனமாயிருந்தாரென்பதாம். அஉ

அ-கை. குருவாக்கியப்படிசமாதியிற்றன்னைத்தரிசித்தல்.

தஞ்சமாக்குருவுஞ்சொன்ன தத்துவவழிதப்பாமற்
பஞ்சகோசமுங்கடந்து பாழையுந்தள்ளியுள்ளிற்
கொஞ்சமாமிருப்பும்விட்டுக் கூடஸ்தபிரமமென்னு
நெஞ்சமுநழுவியொன்றாய் நின்றபூரணத்தைக்கண்டான்.

இ-ள். தஞ்சமாம்தனக்குயிர்த்துணையான குருவுஞ்சொன்ன ஆசாரியரனுக்கிரகஞ்செய்த தத்துவவழி-தற்பததொம்பதசோதனை செய்தமார்க்கங்கள்தப்பாமல்தவறாமல் பஞ்சகோசமுங்கடந்து ஐந்துகோசங்கட்கும்விலட்சணனாய் பாழையுந்தள்ளி அசங்கனாங்கண்டசூனியத்தையுநீக்கி உள்ளில்-அகத்தில் கொஞ்சமாமிருப்பும்-அற்பமாகத்தோற்றியிருக்கின்ற ஸ்மரணத்தையும் விட்டுவிடுத்துகூடஸ்தபிரமமென்றுகூடஸ்தபிரமமென்கின்றநெஞ்சமுநழுவிநினைவுமிற

ந்து ஒன்றாய்நின்றஅத்துவிதமாயிருந்த பூரணத்தைக்கண்டான் பரிபூரணஸ்வரூபத்தைதரிசித்தான்-எ-று. ௮௧

அ-சை-சமாதிகூடிசுவானுபூதிமயமாதல்

அநுபவானந்தவெள்ளத் தழுந்தியேயகண்டமாகித்
தனுகரணங்களாதிச் சகலமுமிறந்துசித்தாய்
மனதுபூரணமாய்த்தேக மானசற் குருவுங்காண
நனவினிற்சுழுத்தியாகி நன்மகன் சுபாவமானான்.

இ-ள். அநுபவானந்தவெள்ளத்துசுபானுபவமாகியநிரதிசயானந்தசமுத்திரத்தில் அழுந்திமூழ்கிஅகண்டமாகி அகண்டாகரமாய்தனுகரணங்களாதி தேகேந்திரிய வந்தக்காரணமுதலியசகலமுமிறந்துஅனைத்துநசித்து சித்தாயசின்மாத்திரானுபவத்தினால்மனதுபூரணமாய்மனம்பூரணமாகி தேகமான பூரணமேதிருவுருக்கொண்டசற்குருவுங்காணஆசிரியரும்பார்க்கும்படி நனவினிற்சுழுத்தியாகிநனவிற்சுழுத்தியையடைந்துநன்மகன் நற்சீடன் சுபாவமானான் தனதியல்பானஸ்வரூபமாக விளங்கினான்-எ-று.

இ-உ-க-ம், சுருதிகுருவாக்கியப்படி சுபானுபவம் விளங்கிற்றென்பதாம். ௮௨

அ-சை-சமாதியினின்றும்வெளிப்படல்

அளிமகனெடும்போதிவ்வா றானபின்மனதுமெள்ள
வெளியில்வந்திடவுணர்ந்தான் விமலதேசிகனைக்கண்டான்
றுளிவிழிசொறியப்பாதந் தொழுதுவீழ்ந்தெழுதுசூழ்ந்தான்
குளிர்முகச்சுவாமிகேட்கக் கும்பிட்டுநின்றுசொல்வான்.

இ-ள். அளிமகன்கனிவுள்ளசீடனானவன் நெடும்போது வெகுநேரம்இவ்வாறானபின் இவ்வண்ணமாகவிளங்கினபின்பு மனதுஸ்வரூபசமஸ்காரமானமனதுமெள்ளவெளியில்வந்திட மெள்ளவச்சமாதியினின்றுந்துரியமாய்வெளிப்படஉணர்ந்தான் அறிந்தவனாய் விமலதேசிகனைநிர்மலமானவாசாரியரைகண்டான்பார்த்து விழிகண்கள் துளிசொரியஆனந்தபாஷ்பம்பொழியபாதம்அவரதுபாதத்தில்தொழுதுவீழ்ந்துசாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து எழுந்துபின்பெழுந்துசூழ்ந்தான்வலம்வந்து குளிர்முக-பிரமானந்தம்விளங்குகின்றமுகத்தையுடையசுவாமிகேட்க ஆசாரியர்கேட்கும்படி கும்பிட்டுநின்றுசொல்வான் சிரசின்மேலஞ்சலியோடுநின்றுதுதிப்பான்.

இ-ம். சமாதியநுபவசமஸ்காரத்தோடு சகசநிட்டைக்கு வெளிப்பட்டதாம். ௮௩

அ-கை, கைம்மாறுகாணேனெனக் குருவைத்துதிசெய்தல்.

ஐயனேயெனதுளேநின் றனந்தசென்மங்களாண்ட
மெய்யனேவுபதேசிக்க வெளிவந்தகுருவேபோற்றி
யுய்யவேமுத்திநல்கு முதவிக்கோருதவிநாயேன்
செய்யவேறொன் றுங்காணேன் றிருவடிபோற்றிபோற்றி.

இ-ள். ஐயனே ஆசாரியரே-எனதுளே நின்று எனதகத்தினின்றுஅனந்தசென்மங்கள் அளவிறந்தபவங்கடோறும் ஆண்டமெய்யனே ஆளாநின்றகர்த்தனே உபதேசிக்க அனுக்கிரகிக்குநிமித்தம்வெளிவந்தகுருவேமானிடவடிவுகொண்டெழுந்தருளியவாசிரியரேபோற்றிவணங்குகிறேன் உய்யவே அடியே னீடேறும்பொருட்டு முத்திநல்கு முதவிக்குவீடளித்தசகாயத்திற்குஒரு தவிஓர்கைம்மாருநாயேன்செய்ய அடியேன்செய்ய வேறொன் றுங் காணேன் மற்றொன் றுங்காண்கிலேன் திருவடிபோற்றிபோற்றிதேவரழகிய பாதங்களைத்துதிக்கின்றேன்-எ-று.

அ-கை, சமாதியனுபவம் பெற்றசிடனைநோக்கிச் சகசநிட்டையனுபவமுதயமாம்பொருட்டுனதனுபவந்தடையின்றிவிளங்கு மெனி லக்தேகைம்மாறெனக்கூறுதல்.

சிட்டனிவ்வாறுசொல்லத் தேசிகர்மகிழ்ந்துநோக்கிக்
கிட்டவாவெனவிருத்திக் கிருபையோடருளிச்செய்வார்
திட்டமாந்தடைகண்மூன் றுந் தொடராமற்சொரூபஞான
நிட்டனாயிருப்பாயாகில் நீசெய்யுமுதவியாமே.

இ-ள். சிட்டன்சீடனானவன் இவ்வாறுசொல்லஇவ்வண்ணந்துதித்துரைக்க தேசிகர் ஆசிரியரானவர் மகிழ்ந்துநோக்கி மகிட்சியுடன்பார்த்துகிட்டவாவெனவிருத்திசமீபத்தில் வாவென்றழைத்திருக்கச்செய்து கிருபையோடு கருணையோடுஅருளிச்செய்வார் அனுக்கிரஞ்செய்வார் திட்டவாம்பொல்லாதவனாகிய தடைகண் மூன்றும் தடைகளும் தொடராமல் தொடர்ந்துவாராமல் சொரூபஞான நிட்டனாய் ஸ்வரூபசைதன்யசமாதியை யுடையவனாய் இருப்பாயாகின் இருப்பாயானால்நீசெய்யுமுதவியாம் இக்தே நீயெனக்குச் செய்யுங் கைம்மாறும்-எ-று.

இ-உ-க-ம், தானானவனுபவமான சுகபோதத்தை தத்தவிரவேறுகருதாமலிருக்கவேண்டுமென்பதாம்.

அ-கை. அனுபவமானவத்துவிதஞானந்தடைகளினுநீங்குமோவென்று சீடனேநோக்கியவைகளுண்டேலனுபவந்திரமாக விளங்கா

நீநானென்னிரண்டில்லாமல் நிறைந்தபூரணமாமென்று
நானாகத்தெரிந்தஞான நழுவுமோகுருவேயென்றான்
றானாகும்பிரமரூபஞ் சற்குரு நூலாற்றோன்று
மானாலுந்தடைகளுண்டேலனுபவமுறைத்திடாதே.

இ-ள். நீதானென்று நீயெனவுநானெனவும் இரண்டில்லாமனி றைந்த துவிதமின்றியத்துவிதமாக வியாபித்தபூரணமாய் பரிபூரண மாய் எங்கும் எவ்விடத்தும் நானாகத்தெரிந்தஞானம் தானாகவிளங் கிய சைதன்யமானது குருவே ஆசாரியரேநழுவுமோவென்றான் நழு வுமோ வென்றுகேட்டான் தானாகும்பிர்மரூபம் தன்மையானபிர்ம ஸ்வரூபமானது சற்குருஆசாரியருபதேசத்தினாலும் நூலால்வேதா ந்த சாஸ்திரங்களினாலும் தோன்றுமானாலும் உதிக்குமானாலும் த டைகளுண்டேல்தடைகளிருக்குமானால்அனுபவமுறைத்திடாது அ வ்வனுபவந் திரப்படாது-எ-று.

நீயென்பது முன்னிலையிற்குருவாகவிளங்கியமனந்தமெனவும் நானென்பதுதன்மையினாற்சிடனாகவிளங்கியவறிவெனவுங்கொள்க.

அ-கை தடைகளேயுமவற்றைநீக்கு முபாயங்களை கூறல்.

தடைகளேதெனிலஞ்ஞானஞ் சந்தேகம்விபரீதங்கள்
படர்செயுமிந்தமூன்றும் பலசன்மப்பழக்கத்தாலே
வுடனுடன்வருஞ்வந்தக்கா லுயர்ஞானங்கெடுமிவற்றைத்
திடமுடன்கெடுப்பாய்கேட்டல் சிந்தித்தற்றெளிதலாலே.

இ-ள். தடைகளேதெனில் அத்தடைகளியாவையென்றால் அஞ் ஞானம் அஞ்ஞானமும் சந்தேகம் சந்தேகமும் விபரீதங்கள் விபரீ தங்களுமாம் படர்செய்யும் துன்பஞ்செய்யும் இந்தமூன்றும் இம் மூன்று தடைகளும் சன்மப்பழக்கத்தால் அனந்தசென்மப்பழக்க த்தினால் உடனுடன்வரும் பலனடிக்கடிவரும்வந்தக்கால்அங்ஙனம் வருமாகின் உயர்ஞானங்கெடும் மேலானஞானமறைபடும்இவற்றை இத்தடைகளை திடமுடன்ஸ்திரமாககேட்டல்சிரவணத்தினாலும்சிந் தித்தல்மனனத்தினாலும்தெளிதலால்நிதித்தியினாலும் கெடுப்பாய்.

அ கை. தடைகளுளவாயினனுபவம் விளங்காதெனத் திருஷ்ட டாந்தமுகத்தாலடிவித்தல்.

அக்கினிகட்டுபட்டா லற்பமுஞ்சுடமாட்டாது
மக்கினஞானத்தாலே வந்தபந்தமும்வேவாது
சிக்கெனப்பழகிக்கேட்டால் சிந்தித்தறெளிதலாலே
விக்கினமடஞ்சந்தேகம் விபரீதம்போக்குவாயே.

இ-ள். அக்கினிநெருப்பானது கட்டுப்பட்டால் மந்திரத்தினு லாஷ்ட்சணத்திஸ்தம்பனமானால் அற்பமும் சற்றும் சுடமாட்டா து எரிக்கமாட்டாது அதுபோல மக்கினஞானத்தால் தடைகளினற் பிரகாசங்குன்றினசித்தினால் வந்தபந்தமும்வரப்பட்ட திரிசிவாசய ணையும்வேவாதுகெடாது ஆதலால் சிக்கெனப்பழகி இடைவிடாமற் பழக்கஞ்செய்து கேட்டல்சிரவணத்தினால் விக்கினமடம் ஞானத்து க்குத் தடையாகிய வஞ்ஞானத்தையும் சிந்தித்தல் மனத்தினால் சந் தேகம் சந்தேகத்தையும் தெளிதலால் சுவானுபவமாகத்தெளிதலி னால் விபரீதம் கற்பிதமான திரிசியத்தையும் போக்குவாய்நீக்குவாய் எ-று. ௬௰

பிரமபாவனையைமூடிப்பேதங்காட்டுவதஞ்ஞானங்
குரவன்வாக்கியநம்பாமற் குழம்பினமனஞ்சந்தேகந்
திரமறுசகமெய்யென்றுந் தேகநானென்றுமுள்ளே
விரவியமோகந்தானே விபரீதமென்பர்மேலோர்.

இ-ள். பிரமபாவனையைமூடி திருக்குஸ்மரணத்தை மறைத்து பேதங்காட்டுவது திரிசியத்தைக்காண்பிப்பது அஞ்ஞானம் அஞ்ஞா னமாம்குரவன்வாக்கிய ஆசாரியருபதேசவாக்கியார்த்தத்தைநம்பா மல் நம்புதல்செய்யாமல் குழம்பினமனம் மனக்கலக்கம் சந்தேகம் சந்தேகமாம் திரமறுநிலையில்லாத சகமெய்யென்றும் சகஞ்சத்திய மெனவும் தேகநானென்றும் சரீரம் யாமெனவும் உள்ளே மனத்தி ன்கண் விரவியமோகந்தானே பொருந்தினமயக்கமே மேலோர்மகா ன்கள்விபரீதமென்பார் விபரீதமென்றுசொல்லுவார்கள்-எ-று. ௬௧

அ வை. அத்தடைகளைக் கெடுக்குங் கேட்டன் முதலியவைக ளினியல்புகூறல்.

தத்துவவனுபோகந்தான் சாதித்தல்கேட்டலென்பா
ரொத்துளபொருளுகத்தா னுசாவல்சிந்தித்தலென்பார்
சித்தமேகாந்தமான தரிசனந்தெளிதலென்பார்
சித்தமிப்படிசெய்தக்கானிர்வாணம்பெறுவாய்நீயே.

இ-ள். தத்துவவனுபோகந்தான் மகாவாக்கியார்த்தமான பிர மோபதேசத்தை சாதித்தல் குருமுகமாகப்பொருதலை கேட்டலெ ன்பார் கேட்டலென்றுரைப்பார்கள் ஒத்துளபொருள் அதனைக்கி யார்த்தத்தைஉசாவல் விசாரித்தலை சிந்தித்தலென்பரா சிந்தித்தலெ ன்று சொல்லுவார்கள் சித்தம் மனமானது ஏகாந்தமானதரிசனம் தனிமையானசுவானுபூதியைத்தரிசித்தலை தெளிதலென்பார் மனித

னென்று சொல்லுவார்கள் நித்தமெப்போதும் இப்படிசெய்தாக்கா ல் இவ்வண்ண மனுசந்தித்தால் நிர்வாணமுத்தியைபெறுவாய்நீ நீ யடைவாய்-எ-று.

இ-உ-க-ம் அஞ்ஞானமுதலியதடைகளைக்கேட்டென் முதலி யவுபாயங்களாற்கொடுக்கிற சுபாநுபவந் தடையின்றிவிளங்கு மெ ன்பதாம்.

அ-கை. அக்கேட்டன்முதலியவைகள் வேண்டுங் காலவள்வு கூறல்.

எத்தனைநாண்ஞாதாவுஞானமு மிருக்குமென்னி
லத்தனைநாளும்வேண்டுமப்பாலோர்செயலும்வேண்டா
நித்தமும்வெளிபோற்பற்று ஞேயமாத்திரமாய்ச்சீவன்
முத்தரானவர்விதேக முத்திபெற்றிருப்பாரென்றும்.

இ-ள். எத்தனைநாள் எவ்வளவுகாலம் ஞாதாவும் காண்பானும் ஞானமும் காட்சியும் இருக்குமென்னில் இருக்குமாகில் அத்தனை நாளும்அவ்வளவுகாலமும்வேண்டும் இக்கேட்டன்முதலியமூன்று வேண்டும்அப்பால் அதற்குமேல் ஓர்செயலும்வேண்டாம் ஓரனுஷ் டானமும்வேண்டுவதில்லை நித்தமும்எப்போதும் வெளிபோல்நான் குபூதத்திலுந்தாக்கற்றிருக்கின்ற வாகாயத்தைபோல பற்றுதிருசிய ங்களிற் பற்றுதலிற்று ஞேயமாத்திரமாய் ஆத்மஸ்வரூபமாய் சீவ ன்முத்தரானவர் சீவன்முத்தியையடைந்தவர்கள்என்றும் எப்பொ ழுதும் விதேகமுத்தி விதேககைவல்யத்தை பெற்றிருப்பவர் அடை ந்திருப்பார்கள்- -று.

இ-ம் காண்பானுங் காட்சியுநீங்கி ஸ்வரூபந் தானாகிறபரியந்த ங்கேட்டேன் முதலியவைகளைப் பழகல்வேண்டுமென்பதாம்.

அ கை அச்சீவன்முத்தர்கள் தொகையுநாமமுஞ் சொல்லிய வர்க ளியல்புகூறத்தொடங்கல்.

ஞானமார்சீவன்முத்தர் நால்வகையாவர்கேளாய்
வானிகர்பிரமவித்து வரன்வரியான்வரிட்ட
னானவர்நாமமீதா மவர்களிற்பிரமவித்தின்
றானமு மற்றமூவர் தாரதம்மியமுஞ்சொல்வேன்.

இ-ள். ஞானமார் சீவன்முத்தர்ஞானநிறைந்தசீவன்முத்தர்கள் நால்வகையாவர்நான்குவிதமாவார்கள் கேளாயதனைக்கேட்பாய் வா னிகர்பிரமவித்து ஆகாயத்துக்கொப்பானபிரமவித்தெனவும்வரன்

பிரமவானெனவும்,வரியன்-பிரமவரியானெனவும் வரிட்டன் பிரம வரிட்டனெனவும் ஆனவர்நாமீதாம் ஆனவர்களுடைய பெரியுவை யாம்அவர்களில் அவர்களுக்குள், பிரமவித்திரானதும்பிரமவித்தினி லேயும்மற்றைமூவர் ஏனையமூவருடையதாரதம்மியமுஞ்சொல்வேன் தாரதம்மியத்தையுஞ்சொல்வேன்-எ-று.

இ-ம், வெளிப்படை.

அ-கை சீவன்முத்தர்களிற்பிரமவித்தினியல்புகூறல்

தீராய்ப்பிரமவித்தாய்த் தெளிந்தவர்தெளியுமுன்னம்
வாரமாயிருந்ததங்கள் வருணமாச்சிரமஞ்சொன்ன
பாரகாரியமானாலும் பலர்க்குபகாரமாக
நேரதாச்செய்வார்தீர்ந்த நிலைவிடாச்சீவன்முத்தர்.

இ-ள். தீராய் தீரமுள்ளவர்களாய் பிரமவித்தாய் பிரமவித்தாய்த் தெளிந்தவர் தெளிவுற்றவர்கள் தெளியுமுன்னம் இங்ஙனந்தெளிவத ற்குமுன்பு வாரமாயிருந்த உரிமையாயிருந்ததங்கள் தங்களுடையவ ருணமாச்சிரமம் வன்னாச்ரமங்களைக்குறித்துசொன்னகன் மநூலாற் சொல்லப்பட்டவைகள் பாரகாரியமானாலும்வருத்தமானகருமங்க ளாயினும்பலர்க்குபகாரமாகயாவர்க்குமனுகூலமாகதீர்ந்தநிலைவிடா மூடிவானநிச்சயத்தைவிட்டுநீங்காதசீவன்முத்தர் பிரமவித்தானவர் கள் நேரதாச்செய்வார் கிரமமாகவவற்றைச்செய்வார்கள்-எ-று.

இ-ம், பிரமவித்து லோகோபகாரநிமித்தஞ் சற்கருமமனுஷ்டி ப்பானென்பதாம். ௩௰

அ-கை-இது.

காமமாதிகள்வந்தாலுங்கணத்திற்போனமத்திற்பற்றூர்
தாமரையிலைத்தண்ணீர்போற்சகத்தொடுங்கூடிவாழ்வார்
பாமரரெனக்காண்பிப்பார் பண்டிதத்திறமைகாட்டா
ரூமருமாவாருள்ளத் துவகைபாஞ்சீவன்முத்தர்.

இ-ள். காமமாதிகள்வந்தாலும் காமமுதலியவைகளொருபோ துசேரிட்டாலும் கணத்திற்போம் அநிச்சாபிராரத்வமாகக்ஷணத்தி னிங்கும்மனத்திற்பற்றூர் மனதில்லையார்கள் தாமரையிலைத்தண்ணீ ர்போல்கமலபத்திரோதகம்போல சகத்தோடுங்கூடிவாழ்வார்உலகத் தாருடன்சேர்ந்துவாழ்வார்கள் பாமரரென அஞ்ஞானிகளைப் போல காண்பிப்பார்காட்டுவார்கள் பண்டிதத்திறமைகாட்டார்வித்துவத்தி

றத்தைத்கொண்டியார்கள் உள்ளத்து அகத்தின்கண் உவகையாம்நித்தியானந்தத்தையுடைய சீவன்முத்தர் பிரமவித்தானவர்கள் ஊமருமாவார்மௌனமாயிருப்பார்கள்எ-று.காமமாதிகள்வந்தாலுமென்றவும்மை அவைகள்வாராவென்பதை யுணர்த்தியதாம்.

ப-ம் பிராரத்வமனுபவித்துத்திரும்படியான இச்சையாதிகளொருபோதேகதேகமாகவுதிக்கினும் அவைகளாத்மசுகத்தை விளக்குதற்குவெஞ்சமாகநின்று விளக்கித்தானுடனே நசித்தலின்காமமாதிகள்வந்தாலுங்கணத்திற்போமெனவும்மனம்பூரணானந்தமாகத்தெளிந்திருத்தலின் மனத்திற்பற்றுரெனவும்உலகருடன்மனமொவ்வாமல்வாக்குங்காயமுமொத்திருத்தலை தாமரையிலைத்தண்ணீர்போற்சகத்தொடுங்கூடிவாழ்வாரெனவும் எவரெவரெங்ஙனமெங்ஙனம் வஸ்துநிச்சயங்கூறினு மந்நிச்சயங்களனைத்துந்தன துவானுபவத்திற்கொத்தலினவைகளைமறுக்கத் தெரிவின்றி பேதையர்கள்போலக்காட்டுதலைபாமரரெனகாண்பிப்பரெனவும் அங்ஙனநிச்சயித்தநிச்சயங்களனைத்துந்தனதனுபவவியாபத்திற் கங்கமாகத்தானவைகளினங்கியாகவிளங்குமனுபவத்தையறிவியாதிருத்தலை பண்டிதநிரமைகாட்டாரெனவும்துரியாதீதமானமகாமௌனமாயிருத்தலைஊமருமாவாரெனவும்மனஞ்சென்றவிடமெல்லாஞ் சிதானந்தமாகவிளக்குதலைஉள்ளத்துவகையாமெனவுங்கூறினர்

இ-ம். பிரமவிதத்தினனுபவவிலாசத்தைக் கூறினதாம் ௬௬

அ-கை-இ-து.

பேதகன்மத்தால்வந்த பிராரத்வநாநாவாகு
மாதலால்விபகாரங்க ளவரவர்க்கானவாகு
மாதவஞ்செயினுஞ்செய்வர் வாணிபஞ்செயினுஞ்செய்வர்
பூதலம்புரப்பரையம் புகுந்துண்பர்சீவன்முத்தர்.

இ-ள்.பேதகன்மத்தால்வந்த அறிவின்மையானசஞ்சிதகன்மத்தாலுண்டானபிராரத்வம் பிராரத்வகன்மம் நாநாவாகும்பலவிதமாம் ஆதலால்ஆதலினால்,விபகாரங்கள் விருத்திகள் அவரவர்க்கானவாகும்அவரவர்களுக்குநியமித்தவையாம் சீவன்முத்தர்பிரமவித்தானவர்கள்மாதவஞ்செயினுஞ்செய்வர் மகாதவத்தைச் செய்தாலுஞ்செய்வார்கள் வாணிபஞ் செயினுஞ் செய்வர் வியாபாரஞ் செய்தாலுஞ்

செய்வார்கள் பூதலம்புரப்பர் பூமிபாலனஞ் செய்தாலுஞ் செய்வார்கள் ஐயம்புகுந்துண்பர் பிக்ஷைவாங்கிப்புசித்தாலும் புசிப்பார்கள் எ-று.

இ-ம். பிரமவித தொழிலைச்செய்யினும் அவைகள் பிராரத்வ கன்மமேயன்றி யவர்க்கில்லையென்பதாம். ௬௭

அ-கை இ-து.

சென்றதுகருதார்நாளைச் சேர்வதுநினையார்கண்முன்
னின்றதுபுசிப்பார்வெய்யி னிலவாய்வின்விழுதுநீந்தும்
பொன்றினசவம்வாழ்ந்தாலும் புதுமையாயொன்றுபாரார்
நன்றுதீதென்னார்சாக்ஷி நடுவானசீவன்முத்தர்.

இ-ள். சென்றதுகருதார்முன்னீங்கினவைகளைநினைத்துவாழார்கள்நாளைச்சேர்வதுநினையார் எதிர்காலத்து வரும்பொருளை நினைத்துமகிழார்கள் கண்முனின்றதுபுசிப்பார் நிகழ்காலத்துள்ள பொருளைப் பிராரத்வமென் றனுபவிப்பார்கள் வெய்யில் உஷ்ண கிரணமானது நிலவாய்அமுர்தகிரணமாய் விண்முழுதுவீழ்ந்தும்ஆகாயத்தினின்று விழுதாகவிறங்கினுலும் பொன்றின மறித்த சவம்வாழ்ந்தாலும் பிரேதஞ்சீவித்தாலும் புதுமையாய் அதிசயமாகவொன்றும்பாரார் ஒன்றையுங்காணார்கள் நன்றுதீதென்னார் இது நனறென்றுந் தீதென்றுஞ் சொல்வார்கள் சாட்சிசாட்சியாய் நடுவான மத்தியகதமாய் விளங்கிய சீவன்முத்தர்பிரமவித்துக்கள் எ-று.

ப-ம். முன்புள்ளவறிவன்மையும் பின்புள்ள திரிசியவுணர்வையுங்காணுது நடுநிலையாகிய பரவுணர்விற்சுகித்திருத்தலின் சென்றது கருதார்நாளைச் சேர்வது நினையார்கண் முன்னின்றதுபுசிப்பா ரெனவும்சகலவிசித்திரமுந்தனதுலீலையாகக்கருதி அவைகளில் வியப்புறுதிருத்தலின் வெய்யினிலவாய் வினவிழுதுவீழ்ந்தும் பொன்றின சவம்வாழ்ந்தாலும் புதுமையாயொன்றும்பரரெனவும் சர்வமுந்தன் அசித்துருவமாக விளங்குதலின் நன்றுதீதென்னுரெனவும்பத்தியாகச்சர்வசாட்சியானதானத்துவிதமாகவிளங்குதலின் சாட்சி நடுவான சீவன்முத்தரெனவுங் கூறினர்.

இ-ம். பிரமவித்துமனமடங்கிய யனுபவமாய் நிற்றலி னென்றைக் கருதுதலும் வியப்புறுதலுமிலவென்பதாம் இந்நான்குசெய்யுளின் முந்தின பிரமவித்தினியல்பைக் கூறினதெனக்கொள்க. ௬௮

அ-கை மற்றமூவரியல்பு.

அ

பஞ்சினையூழித்தீப்போற் பலசன்மவிதவித்தாஞ்
சஞ்சிதமெல்லா ஞானத் தழல்சுட்டுவெண்ணீராக்குங்
கிஞ்சிலகாமியந் தான் கிட்டாமல்விட்டுப்போகும்
விஞ்சினபிராரத்வத்தின் வினையனுபவித்துத்தீரும்.

இ-ள். பஞ்சின பஞ்சை ஊழித்தீப்போல் வடவாதல மெறிப்பதுபோல பலசன்மஅநந்தபவங்களுண்டாதற்கு விவிதவித்தாம்பலவிதவிதைகளான சஞ்சிதமெல்லாம் சஞ்சிதகன்மங்களனைத்தையும் ஞானத்தழல் ஞானக்கினியானது சுட்டுவெண்ணீராக்கும் எரித்து வெண்மையாகியசாம்பலாக்கும் கிஞ்சில் அற்பமும், ஆகாமியந்தான் மியகன்மமானது கிட்டாமல் விட்டுப்போகும் நெருங்காமனீங்கும் விஞ்சினசேடித்தபிராரத்வத்தின்வினை பிராரத்வகன்மமானது அனுபவித்துத்தீரும் மூன்றுவிதமாக வனுபவித்துநீங்கும்-எ-று.

மூவிதமாவன இச்சையனிச்சைபரவிச்சையென்பனவாம்.

அ-கை. இருவினை நீங்குமேதுகூறல்.

பெருமையாற்பிராரத்வத்தைப் புசிக்குநாட்செய்தகன்ம
மறுமையிற்றொடர்ந்திடாமன் மாண்டுபோம்வழியேதென்னிற்
சிரியவரிகழ்ந்துஞானி செய்தபாவத்தைக்கொள்க
ரறிபவரறிந்துபூசித் தறமெலாம்பரந்துண்பாரே.

இ-ள். பொருமையால் சாந்தத்தினால்பிராரத்வத்தைப்பிராரத்வகன்மத்தை புசிக்குநாள் அனுபவிக்குங்காலத்தில், செய்தகன்மம் செய்யுங்கருமங்கள்மறுமையில்மேற்பிறவியைக்கொடுப்பதற்குதொடர்ந்திடாமல தொடர்ந்துவராமல் மாண்டுபோம் நசிக்கும்,வழியேதென்னில்மார்க்கமியாதென்றால்,சிரியவரிகழ்ந்துமூடர்கணிந்தித்து ஞானிசெய்தஞானவான்செய்யும் பாவத்தைக்கொள்வர்பாகவன்மத்தைப்பெற்றுக்கொள்ளுவார்கள் அறிபவர் விவேகிகள் அறிந்துசிவஸ்வரூபமென்றறிந்து பூசித்து ஆராதித்து அறமெலாம் அவர்கள் செய்யுந் தருமங்களனைத்தையும்பறித்துண்பார்கவர்ந்தனுபவிப்பார்கள்.

அ-கை. சரீரத்திரயவொழிபுகூறல்.

அறியமெஞ்ஞானத்தீயா லவித்தையாம்முடனீராமே
பெரியதூலமுங்காலத்தாற் பிணமாகிவிழுமந்நேர
முரியசூக்குமசரீர முலையிரும்புண்டநீர்போற்
றுரியமாய்விபுவாய்நின்ற சொரூபத்திலிறந்துபோமே.

இ-ள். அரியமெய்ஞ்ஞானத்தீயால் தீயால்அரிதற்கரியஞானுக்கினியின்லவித்தையாமுடனீரும் காரணசரீரநசிக்கும்பெரியதூலமும்பருத்ததூலசரீரமும் காலத்தாற்பிணமாகிவிழும் காலநியமப்படிப்பிரேதமாம்அந்நேரம்அப்போது உரியசூக்குமசரீரம் சாதனத்துக்குரித்தானசூக்குமதேகமானது உலையிரும்பு கொல்லனுலையிற்காய்ந்தவயமானது உண்ட நீர்போல்கிரகித்தசலத்தைப்போலதுரியமாய்துரியமாகவும்விபுவாய்நின்ற வியாபகமாகவுமிருந்த சொரூபத்லிறந்துபோம் பிரமஸ்வரூபனசிக்கும் எ-று.

இஉ-௬-ம்சஞ்சிதவினையுங்காரணசரீரமும் பரஞானத்தினாற்கெடுதலுமாகாமிவ்வினையுஞ் சூக்குமதேகமுமந்தஞானத்தி லயமாகுதலும்பிராரத்வகனமுந் தூலதேக நியமித்தகாலவளவி னீங்குதலுமாமென்பதாம்.

அ-கை. விதேகமுத்தினியல்புகூறல்.

கடமெனுமுபாதிபோனாற் ககனமொன்றானாற்போல
வுடலெனுமுபாதிபோன வுத்தரஞ்சீவன்முத்த
ரடிமுடிநடுவுமின்றி யகம்புறமின்றிநின்ற
படிதிகழ்வேகமுத்திப் பதமடைந்திருப்பரென்றும்.

இ-ள். கடமெனும் குடமென்கிறஉபாதிபோனால் உபாதிநீங்கினால் ககனமொன்றானாற்போல கடாகாயமுதலிய நான்குமேகமானதுபோல உடலெனும் மூன்றுதேக மென்கிற உபாதிபோனவுத்தரம் உபாதி நீங்கினக்ஷணம் சீவன்முத்தர் சீவன்முத்தரானவர் அடிமுடிநடுவுமின்றி ஆதிமத்யாந்தரகிதமாய் அகம்புரமின்றி உட்புறமின்றி என்றுநின்றபடிதிகழ் எப்போது மிருந்த வண்ணம் விளங்குகின்றவிதேகமுத்திப்பதம் விதேக முத்திப்பதத்தை அடைந்திருப்பார் பெற்றிருப்பார் எ-று.

அ-கை. அவ்வநுபவமெஞ்ஞான்றும் விளங்குவதெனல்.

சொல்லியமகனேயெங்குஞ் சூழ்வெளியிருக்கமண்ணைக்
கல்லியபின்புதோன்றுங் கிணற்றினாகாயம்போல
வொல்லையாம்பிரமநூலா லுற்றதுபோலேதோன்று
மெல்லையினுமெப்போது மேகமென்றிருந்திடாயே.

இ-ள். சொல்லியமகனே முன்னனுபவஞ்சொன்னபுத்திரா எங்கும்எவ்விடத்தும் சூழ்வெளியிருக்க சூழ்ந்தவாகாய மிருக்க மண்ணை பூமியை கல்லியபின்பு அகழ்ந்தபின்புதோன்றும்உண்டானதுபோ

லத்தோன்றுகின்றகிணற்றிஞகாயம்போல் கூபாகாசம்போல ஒல்லை யாம்பிரமம் அஞதியாய்விளங்குகின்ற தர்மஸ்வரூபமானது நூலால் ஆத்மஞானசாஸ்திரங்களால் உற்றதுபோலேதோன்றும்உதித்ததுபோலத்தோன்றும் எல்லையில் பிரமாணதீதமானநாம்சுத்தத்தை தன்னியஸ்வரூபமானமாய் எப்போதும் எக்காலமும் ஏகமென்றிருந்திடாய்ஒன்றேயென்றிருப்பாய் எ-று.

இ உ க ம்இப்போதுதித்ததுபோலத் தோற்றியவனுபவஞ் சிருட்டிக்கு முன்னும்பின்னுநறிவுமான வெப்போதுமிருந்து நித்தியதிருத்தியாக விளங்கிய சச்சிதானந்தமே யன்றியிப்போ துதித்ததன்றென்பதாம்.

அ-கை. சத்தசத்தினுண்மையைத்தெரிவித்தல்.

கானனீக்கிளிஞ்சில்வெள்ளி கந்தப்பநகர்கநாவூர்
வானமைகயிற்றிற்பாம்பு மலடிசேய்முயலின்கோடு
பீனமாந்தரிபுமானிப் பிரபஞ்சமெல்லாம்பொய்யே
ஞானமெய்மகனேயுன்னை நம்மானைமறந்திடாதே.

இ-ள்.கானநீர்கானற்சலம்போலவும்கிளிஞ்சில்வெள்ளிசுத்திகாரசிதம்போலவும்கந்தர்ப்பநகர்கந்தர்வநகரம்போலவும்காநாவூர்சொற்பநகரம்போலவும் வான்மை ஆகாயநீலம்போலவும்கயிற்றிற்பாம்பு ரச்சுசர்ப்பம்போலவும்மலடிசேயவந்தியா புத்திரன்போலவும்முயலின்கோடு சசவிஷாணம்போலவும் பீனமாந் தறிபுமானபருத்ததாணு சோரனைப்போலவும் இப்பிரபஞ்சமெல்லாம்பிரமத்திற்றோன்றுகின்றவிச்சகத்தனையும் பொய்யே மித்தையேயாம் ஞானமெய்சத்தசைதன்னியமொன்றுமேயுண்மையாம்மகனே மாணக்கனே உன்னை இங்ஙனம்விளங்கிய வுனதுஸ்வரூபசைதன்யத்தைநம்மாணை தமதாணைப்படிக்கு மறந்திடாதே மறவாமலதுவாய்விளங்குவாம்-எ-று.

இ-ம் எப்போதுஞ்சத்தான சுகபோத மிருக்கின்றதன்றிய சத்தான திரிசியங்களில் வென்பதாம்.

தத்துவவிளக்கப்படலம்

முற்றியது.

உ

சிவமயம்.

# இரண்டாவது
# சந்தேகந் தெளிதற் படலம்.

அ-கை. முற்படலத்திற் றத்துவமானவானந்த பிரஞையே நிஷ்பிரஞையால் விளக்கியினிச்சொரூபபிரஞையினுன் முற்கற்பனையாகத் தோற்றிய ஜீவேஸ்வர சகஞ்சிற்சுகாகாரமாக விளங்குவதைவிளங்கும்பொருட்டுச் சந்தேகந்தெளிதலைக் கூறுகின்றார்.

நரர்குழிபறித்துமெள்ள நாட்டியநெடியகம்ப
முறமுறக்குத்திக்குத்தி யுரப்பிக்குமுபாயம்போல
பரமமாஞ்சொரூபந்தன்னிற் பற்றியமனோவிருத்தி
திரநிலைபெறச்சந்தேகந் தெளிதலைமொழிகின்றேனே.

இ-ள். நரர்மானிடர்கள்குழிபறித்துபள்ளம்கெல்லிமெள்ளநாட்டியமெள்ளவெடுத்துநட்ட நெடியகம்பம் நீலகண்டஸ்தம்பமான துஉரமுறவ அசைவின்றி திரமாகநிற்கும்பொருட்டு, குத்திக்குத்திகுத்திக்குத்திஉரப்பிக்கும் பலப்படுத்துகின்ற உபாயம்போல் புத்தியைப்போல பரமமாஞ்சொரூபந்தன்னி பிரமஸ்வரூபத்தில்பற்றிய மனோவிருத்திபொருந்திய சித்தவிருத்தியானது திரிநிலைபெற திரநிலையை யடையும்பொருட்டு சந்தேகந்தெளிதலை மொழிகின்றேன் சொல்கின்றேன்-எ-று. இத்திட்டாந்தந் தூணுகை நந்நியாயமெனக்கொள்க.

ப-ம். தானல்லாதவிஷயங்களைநீக்கித் தானாகிய பிரமத்திற்கலந்தமனம்அப்பிரமவியாபகமான பூரணவிருத்தியிற் சஞ்சரிக்குமிடத்திற் சர்வம்பிரமமயமென்னுஞ் சாக்ஷாத்காராநுபவந் தடையின்றி விளங்குவதே விவகரித்தும் விவகரியாத நிலையாதலின் அதற்குத்தடையாயுள்ளவைகளைக்களைதல் வேண்டுமென்பார் சொரூபந்தன்னிற்பற்றிய மனோவிருத்திதிரநிலைபெறச் சந்தேகந்தெளிதலென்றார் இ-ம். சித்தினிடத்தினிடத்துதயமாய்ப் பகிர்முகமின்றி யச்சித்திற்கரைந்தமனமானது சென்றவிடமெல்லாஞ் சிதானந்தமாக ரமிக்கும்பொருட்டுச் சந்தேகந்தெளிதலைக் கூறத்தொடங்கினதாம்.

அ-கை. குருகுலவாசஞ்செய்யுந்தன்மையைக்கூறல்.

நற்கருத்துடையோனாகி ஞானவானாகிநின்றோன்
மர்க்கடநியாயம்போல மகாபூதவிகாரந்தொட்டு
நிர்க்குணவிதேகமுத்தி நிலைபரியந்தஞ்சொன்ன
சற்குருவினைவிடாமற் சந்ததமனுசரித்தான்.

இ-ள். நற்கருத்துடையோனாகி பேரானந்தமான சிந்தையையுடையவனாய் ஞானவானாகி சைதன்ய ஸ்வரூபியாகி நின்றோன் இருந்தசீடனான மர்க்கட நியாயம்போல் மர்க்கடநியாயத்தைப்போல மகாபூதவிகாரந்தொட்டு பஞ்சபூத காரியமானது தூலதேகமுதல் நிர்க்குண திரிகுணரகிதமான விநோதமுத்திநிலைபரியந்தம் விதேக்கைவல்லியமட்டும் சொன்னசற்குருவினை விடாமல் அருளியவாசாரியைவிட்டு நீங்காமல் சந்ததமனுசரித்தான் சதாகாலமுந்தொடர்ந்துநின்றான்.

இ-ம். வெளிப்படை. ௨

சந்ததம்புருடன்றன்னைச் சாயைபோவிடாமலன்பா
மைந்தனைநோக்கிசாக்ஷி மாத்திரமாய்நின்றாயோ
சிந்தையிலையமெல்லாந் தீர்ந்தவோதெளிவினுள்ளே
யந்தரங்கலந்ததுண்டோ வனுபவமுரைசெய்வாயே.

இ-ள். சந்ததம் எப்போதும் புருடன்றன்னை ஓர்புருடனைசாயைபோல்விட்டு நீங்காத சாயைபோதவிடாமல் ஆசாரியரை விட்டு நீங்காமல் அன்பாமைந்தனை யவன்புருனமாய் நிற்கின்றசீடனைநோக்கி அருட்கண்சாத்தி சாக்ஷிமாத்திரம் நின்றாயோ பிரத்யேகாத்மஸ்வரூபமாகநிற்கின்றாயா சிந்தையில் மனதின்கணுள்ள ஐயமெல்லாம் சமுசயங்களனைத்தும் தீர்ந்தவோ நீங்கினவோ தெளிவினுள்ளே தெளிவின்கண் அந்தரம் சிவேஸ்வர சகபேதம்கலந்ததுண்டோ சேர்ந்ததுமுளதோ அனுபவமுறைசெய்வாய் உனதனுபவத்தைச் சொல்வாய்-எ-று.

இ-ம். பேதமின்றித்தெளிவாக சுவானுபவமாய் விளங்குகின்றாயாவென மூவகையாகவினாவினதாம். ௩

அ-கை.மூன்வினாமூன்றற்கும் விடைகூறல்.

எனவுரைத்தருளுமாசா னிருபதப்வணங்கியெந்தாய்
சசனவன்காட்டின்மோகத் தமத்தெழுபேதப்பேய்க
ளுனதருளுதயவெற்பி லுபதேசவருக்கறோன்றி
மனவிழிதெரியஞான வான்கதிர்பரந்தாலுண்டோ.

இ-ள். எனவுரைத்தருளும் என்றுகேட்டருளிய ஆசானிருபதம்வணங்கி தேசிகருடையபதங்களை வணங்கிப்பணிந்து எந்தாய் என்னுடையபிதாவே சன்னவின்காட்டில் வலிமையான பவாரண்யத்திலிருக்கும் மோகத்தமத்து மோகாந்தகாரத்திலெழும் தோன்றுகின்ற பேதப்பெயர்கள் பேதங்களென்னும் பிசாசங்கள் உனதருளுதயவெற்பில்தேவரீரதுகருணையென்னுமுதயகிரியில் உபதேசவருக்கன்றோன்றில் பிரமோபதேசமென்னுஞ் சூரியனுதித்துமனவிழிதெரியசுகக்கண்விளங்க ஞானவான்கதிர் மேலானசிற்பிரகாச மானது பரந்தல் வியாபித்தால் உண்டோ இருக்குமோ-எ-று.

ப-ம். சாட்சிமாத்திரமாய் விளங்குகின்றதென்பார் உபதேசவருக்கன்றோன்றியெனவும் சிந்தையிலேயமெல்லாந்தீர்ந்துதென்பார்மனவழிதெரியவெனவும் அந்தரமானபேதமுதிக்க வில்லையென்பார் ஞானவான்கதிர்பரந்தாலுண்டோவெனவுங்கூறினர்.

இ-ம். தனதனுபவத்திற் சந்தேகவிபரீதமென்பதையறிவித்தாம்.

அ-கை. சமாதியிற்றடையின்றாயினுஞ் சகசத்திலவையின்றிநிற்பதற்கு வினாவேண்டுவ துண்டெனல்.

மந்திரமூர்த்திதன்னான் மாற்றியபேய்போனாலு
மெந்திரமெழுதிகட்டி யினிவராவகைசெய்வார்போன்
முந்தியுன்னுபதேசத்தான் மேகம்போனாலுமையா
புந்திநின்றுதைக்கவின்னம் புகலும்விண்ணப்பமுண்டே.

இ-ள். மந்திரமூர்த்திதன்னால் மாந்திரிகனால்மாற்றியப்பேய்நீக்கினபிசாசமானது போனாலும் நீங்கினாலும்எந்திரமெழுதிக்கட்டி எந்திரஸ்தாபனஞ்செய்து இனிவராவகை மேல்வராதவண்ணம் செய்வார்போல் செய்பவர்களைப்போல முந்திமுன்னமே உன்னுபதேசத்தால் தேவரீரனுக்கிரகத்தினால் மோகம்போனாலும் மயக்கநீங்கினாலும்ஐய எனதாசிரியரே புந்திநின்றுரைக்க அறிவினிலே பெறும்பொருட்டு இன்னம்மேலும் புகலும்விண்ணப்பமுண்டு அடியேன் கேட்கும்விண்ணப்பமுள்ளது-எ-று.

இ-ள். சகசத்துக்குதடையாயுள்ள சந்தேகங்களைநீக்கும் பொருட்டு வினவத்தொடங்கினதாம்.

அ-கை. சீடன்றனக்கனுபவமான பிரம்மவஸ்துமனோவாக்குக் கோசரமா ரேசர்மாவென வறிநிமித்த மந்நு-னஞ்கூறுஞ் சுருதிவாக்கியத்தை யிரண்டுசங்கையாக வினாதல்.

ஆகமப்பிரமாணத்தா லறியென்றும்வாக்குக்கெட்டா
தேகமாம்பிரமமென்று மிதயத்தா லுணர்வாயென்றுஞ்
சோகமாமனதிற்கெட்டாச் சுயஞ்சோதியென்றுஞ்சொன்னீர்
மோகமாமிரண்டுசங்கை முளைத்தனபறித்திடீரே.

இ-ம். ஏகமாம்பிரமம் அத்துவிதப்பிரம்மத்தை ஆகமப்பிரமாணத்தால்வேதமுடிவானமகாவாக்கியப்பிரமாணத்தினால் அறியென்றும் அறிவாயெனவும் வாக்குக்கெட்டாதென்றும் இவ்வேதவாக்கியத்துக் கெட்டமாட்டாதெனவும் சுயஞ்சோதி இச்சுயம்பிரகாசத்தை இதயத்தாலுணர்வாயென்றும் மனதிலறிவாயெனவும்சோகமாமனதிற்கு துன்பமானமனதிற்கு எட்டாதென்றும்அரிதறகரியதெனவும் சொன்னீர் அருளினீர் மோகமாம்மயக்கமாகிய இரண்டு சங்கைகளுளவாயின் பறித்திடீர் எ-று. பிரமவஸ்து மனோவாக்குகளுக் ககோசரமுங் கோசரமுமாமென வேதங்கூறுவதை ஆசிரியர் கூறினதாகக்கொண்டு வினாவினதென்க.

இ-ம். வெளிப்படை.

அ-கை. முதற்சங்கையிற் பிரமஞ்சுருதிக் ககோசரமாமென்றதற் குத்தரங்கூறல்.

மற்றைமுப்பிரமாணத்தால் வஸ்துநிர்ணயங்கூடாதே
யுற்றதோர்விடையம்பூத முபயமன்றாதலாலே
குற்றமாங்குணவிசேடங் கூடாமலிருக்கையாலே
யிட்டதுவாக்குக்கெட்டா தென்பதுமறிவாய்நீயே.

இ-ம். மற்றமுற்பிரமாணத்தால் ஏனையமூன்று பிரமங்களினாலும் வஸ்துநிர்ணயங்கூடாது ஸ்வரூபநிச்சயத்தை யறிதற்கூடாவாம் உற்றதோர் விடையம் பிரத்தியக்ஷமெய்திடுமதோர்விஷயமாதலானும் பூதம் அனுமானங் காரியத்தைக்கொண்டறியப்படுங் காரணமாதலானும் உபயம் உபமானமும் முப்மேயவுபமானமென்னுமிரண்டாதலானும் அன்றாதலால் கூடாதலால் குற்றமாம் அவைகளாலறியலாமெனபதும் பிழையேயாம் குணவிசேடங்களானவை கூடாமலிருக்கையால் சேராதிருக்கன்றபடியால் இற்றது இத்தன்மையானவப்பிரமம்வாக்குக்கெட்டாதென்பதும் சத்தமாகியவேதங்களுக்கதீதமென்பதும் அறிவாய்நீ தெரிந்துக்கொள்வாய்-எ-று.

இ-ம். பிரமம்அகோசரமென்பதையுறுதிப்படுத்துநிமித்தமாக முதலியநான்குபிரமாணங்களினாலுமறியகூடாதென வறிவித்ததாம்.

அ-கை. அச்சங்கையிற் பிரமஞ்சுருதிக்குக்கோசரமாமென்ற தற்குத்தரம்.

வாக்கியந்தனக்கெட்டாத வஸ்துவென்றுரைத்தவேதம்
வாக்கியவிருத்தியாலவ் வஸ்துவைக்காட்டிற்றன்றோ
வாக்கியங்களிலேமான மாவதேதென்றாயாகில்
வாக்கியமிரண்டுமெய்யே மறைகள்பொய்யாநீகேளாய்.

இ-ள். வாக்கியந்தனக்கு சத்தத்திற்குஎட்டாதவஸ்துவென்றுரைத்த எட்டாதபொருளென்றுசொன்ன, வேதம்வேதமானது வாக்கியவிருத்தியால் மகாவாக்கியவிசாரத்தால் அவ்வஸ்துவைஅப்பிரமப்பொருளைக்காட்டிற்று காட்டியது வாக்கியங்களில்இவ்விரண்டு வாக்கியங்களில் மானமாவதேதென்றாயாகில் பிரமாணமாவதியாதென்றுகேட்பாயாகில்வாக்கியமிரண்டுமெய்யே இவ்விரண்டுவாக்கியமுமுண்மையே மறைகள் வேதங்கள் பொய்யா அசத்தியமுரையா நீ கேளாய்அதைநீகேட்பாய் எ-று.

அற்றோவென்பதனை-இ-ம்-வெளிப்படை. அ

அ-கை. பிரமஞ்சுருதிவாக்கியங்களுங் கோசரமும் கோசரமுமாமெனக்கூறுதல்.

தன்பதியல்லாப்பேர்க ளைமையல்லனல்லனென்று
ளன்பனைக்கேட்டநேர மவள்வெட்கிமௌனமாகு
மென்பதுபோலநீக்கி யிதன்றிதன்றெனச்சேடித்த
பின்பறப்பிரமந்தன்னைப் பேசாமற்பேசும்வேதம்.

இ-ள். தன்பதியல்லாப்பேர்களைமை தனதுநாயகனல்லாதவர்களை அல்லனல்லனென்றுள் இவனல்லனிவனல்லனெனக்கூறினள் அன்பனைக்கேட்டநேரம் நாயகனைக்காட்டிக்கேட்டபோது, அவள் அத்தலைவியானவள்வெட்கிவெட்கமுற்றுமௌனமாகுமென்பதுபோல பேசாதிருந்தாளென்பதைப்போலஇதன்றிதன்றென இதுவல்லவிதுவல்லவென்று நீக்கி தள்ளி பின்பின்புசேடித்த விஞ்சினபரபிரமந்தன்னைபரப்பிரமவஸ்துவை வேதம்வேதமானது பேசாமற்பேசுமசொல்லாமற்சொல்லும்-எ-று.

இ-ம். சுருதிசத்தரூபத்தாலறிவிக்காமல்அருத்தரூபத்தாலறிவிக்குமென்பதாம். கூ

அ-கை. இரண்டாஞ்சங்கையிற் பிரமமனதிற்கெட்டுமெட்டாதென்பதற் குத்தரங்கூறுவான் றொடங்கி மனோவுற்பத்தியின்காரணங்கூறுகின்றார்.

முந்தியசங்கைதீர மொழிந்ததையறிந்துகொள்வாய்
பிந்தியசங்கைதீரப் பேசுமுத்தரநீகேளாய்
யிந்தியங்களுக்குராச னிதயமாமதினெண்ணங்கள்
புந்தியுமனமுமென்றே புறத்தகத்துலாவியாடும்.

இ-ள். முந்தியசங்கைதீர முதற்சங்கைதீரும்படி மொழிந்ததை சொன்னதைஅறிந்துகொள்வாய்தெரிந்துகொள்வாய்பிந்தியசங்கைதீரஇரண்டாஞ்சங்கைதீரும்படி பேசுமுத்தரம் சொல்லுமுத்தரத்தையும்நீகேளாய்நீகேட்பாய் இந்தியங்களுக்கு மனமுதலியவிந்தியங்களுக்குஇராசன் தலைவனனது இதயமாம் ஞானமாம் அதினெண்ணங்கள் அதனினைவுகள் புநதியுமனமுமென்று புத்தியெனவும் மனமெனவும்புறத்தகத்து புறம்பிலுமுள்ளிலும்உலாவியாடும்சஞ்சரிக்கும்-எ-று.

இ-ம். ஞானஸ்மரணமேமனமுருபுத்தியுமாமென்பதாம். ௰

அ-கை-இ-து.

உன்முகம்போற்கண்ணாடிக் குள்ளொருமுகங்கண்டாற்போற்
சின்மயவடிவின்சாயை சித்துப்போற்புத்திதோன்று
நின்மலவிருத்தியந்த நிழல்வழியாயுலாவுந்
தன்மநன்மகனேயித்தைத் தானன்றேஞானமென்பார்.

இ-ள். உன்முகம்போல் உனதுவதனத்தைப்போல கண்ணாடிக்குள்எதிரிட்டகண்ணாடிக்குள்ளே ஒருமுகங்கண்டாற்போல்ஓர்வதனங்கண்டதுபோல சின்மயவடிவின்சாயை சைதன்ய ஸ்வரூபச்சாயையேசித்துப்போல் அறிவைப்போல புத்திதோன்றும்புத்தியிற்பிரதிபலிக்கும் நின்மலவிருத்திநின்மலவிருத்தியானது அந்தநிழல்வழியாய் அச்சாயையின் மார்க்கமாக உலாவுஞ்சஞ்சரிக்கும்தன்மநன்மகனே தர்மரூபியான சற்புத்திரா இதைத்தானன்றே இவ்விருத்தியையன்றேஞானமென்பார் அறிவென்றுசத்துருக்கள் சொல்லுவார்கள் எ-று.

ப-ம் அந்தக்கரணப்ரதிபலனஞ்சிதாபாசமென்பார் சித்துப்போற்புத்திதோன்றுமெனவும்புத்தியிற்றங்குஞ்சிற்சாயையேவிருத்தியென்பார் நின்மலவிருத்தியெனவும் அவ்விருத்தி சிதாபாசனுக்கிடமாக விளங்குமென்பார் அந்தநிழல்வழியாயுலாவுமெனவும் லோகாந்தகுந்தம்போலச்சிதாபாசாந்தவிருத்தியேஞானமென்பார் இத்தைத்தானன்றே ஞானமென்பாரெனவுங்கூறினர்.

இ-ம் விருத்திஞானமுஞ்சிதாபாசனுமிவையெனக்கூறினதாம்.

அ-கை இது.

உருக்கியதராநீர்நானுவுருவங்களானுற்போல
விருத்திகள்கடபடாதிவிடயமாய்ப்பரிணமிக்கு
பருப்பலவிடயமெல்லாமாபாசன்றேற்றுவிக்க
மிருட்டினில்விளங்குகண்ணுமில்லாமற்பொருள்காணுதே.

இ-ள். உருக்கியதராநீர் குகையில்வைத்துருக்கிய தராநீரான துநாநாவுருவங்களானுற்போல பலவித வடிவங்களான துபோலவிருத்திகள் விருத்திகளானவை கடபடாதிவிடயமாய் பரிணமிக்கும் கடம்படமுதலிய வாகரங்களாக வேறுபடும் விடயமெல்லாம் விடயங்களனைத்தையும் அருப்பலம் அரும்பலமென்னப்பட்ட ஆபாசன்றேற்றுவிக்கும்சிதாபாசன்றெரிவிக்கும் விளக்குங்கண்ணுமில்லாமல்தீபமும்விழியுமின்றி இருட்டினில் இருளிருக்கும் பொருள்காணு துவஸ்துதெரியமாட்டாது எ-று. சிற்சாயையேசகத்தாகத்தோற்றுதலின்விருத்தியேகடபடாதிவிடயமாய்ப்பரிணமிக்குமென்ருர். ௰உ

அ-கை-இது.

எரிகின்றவிளக்காற்கண்ணுவிருட்பொருள்காணல்வேண்டுந்
தெரிகின்றபரிதிகாணச்சென்றிடிற்கண்ணேபோதும்
விரிகின்றசகத்தைக்காணவிருத்தியும்பலமும்வேண்டும்
புரிகின்றவிருத்தியொன்றேபோதுமெய்ப்பொருள்காண்போர்க்கே

இ-ள். எரிகின்றவிளக்கால்பிரகாசிக்கின்றதீபத்தினுலுங்கண்ணுல்விழியினுலும் இருட்கும்பொருள்காணல்வேண்டும் இருட்டின்கண்ணுள்ளவஸ்துவைபார்க்கவேண்டும் தெரிகின்றபரிதிதெரியாநின்றசூரியனைகாணச்சென்றிடல் பார்க்கச்செல்லில் கண்ணேபோதும் நேத்திரமொன்றுமேபோதும் அவைபோல் விரிகின்றசகத்தைக்காணபரந்திருக்கின்றவுலகத்தைப்பார்க்க விருத்தியும்பலமும்வேண்டும்விருத்தியும் பலமும்வேண்டும் மெய்ப்பொருள்காண்போர்க்கு உண்மையானபிரமவஸ்துவைத் தரிசிப்பவர்களுக்கு புரிகின்ற முன்சொல்லாநின்றவிருத்தியொன்றேபோதும்விருத்தியொன்றுமேபோதும்-எ-று.

ப-ம். விஷயஞ்ஞானத்தைப் போக்குதற்குவிருத்திஞானமும் அதையறிதற்குப்பலரூபமான சிதாபக்கனும்வேண்டுமென்பார் சகத்தைக்காண விருத்தியும் பலமும் வேண்டுமெனவும் ஆத்மாவைத் தரிசித்தற்குவிகாரரூபமான விருத்திஞானம்வேண்டுமென்பார்விருத்தியொன்றேபோது மெய்ப்பொருள் காண்போர்க்கெனவுங் கூறினர்.

இ-உ-க-ம் லோகாந்த குந்தம்போல வாதாரமான விருத்திஞா னமாதேயமான சிதாபாசனுமாகிய விவ்விரண்டிலக்கணமுங் கூறிய தாம்.

அ-கை-மனத்தினுருவங்கூறல்.

விருத்தியும்பலமுங்கூடும்விகாரமேமனமென்பார்கள்
கருத்தெழும்விருத்திவேண்டும்கணத்தின்மனத்திற்கெட்டும்
வருந்திபபலமாமிந்தமனத்திற்கெட்டாதுகண்டாய்
யருத்தமிப்படியென் றறிந்துநீதெளிந்திடாயே.

இ-ள். விருத்தியும்பலமுங்கூடும் விருத்தியும்பலமுஞ்சேர்ந்தவி காரமேவிகாரரூபமே மனமென்பார்கள் மனமென்று சத்துக்கள் சொல்லுவார்கள் கருத்து பகுத்தறியுநினைவில் எழும்விருத்திஉண் டாகும்விசாரஞானமானது வேண்டுங்கணக்கினல் சித்தையறிதற் கொருதலையாகவேண்டுதலின் மனத்திற்கு அவ்விருத்திரூபமான ம னத்திற்கு எட்டும்சித்தெட்டும் வருத்தியவருத்துகின்ற பலமாய்வி டயத்தை யறியும்பலரூபமான இந்தமனத்திற்கு இம்மனத்திற்குஎ ட்டாதுகண்டாய்சித்தெட்டாது அருத்தம்முன்சொல்லியவிரண்டு க்கும் பொருள் இப்படியென்றுஇவ்வண்ணமென்றறிந்து ஐயமகன் றுசந்தேகநீங்கிநீதெளிந்திடாய்நீதெளியக்கடவாய் எ-று.

சித்துசம்பந்தஞானம் விருத்தியுஞ் சடசம்பந்தஞானம்பலமு மெனக்கொள்க.

ப-ம். சிற்சடரூபமனமென்பார்விருத்தியும்பலமுங்கூடும்விகா ரமேமனமெனவும் சித்தம்சமானவிருத்தியினற்சிந்தையறியலாமெ ன்பார்விருத்திவேண்டுங் கணக்கினனமனத்திற்கெட்டுமெனவும் சடாம்சமானமனதினற் சிந்தையறியக் கூடாதென்பார்-பலமா மிந் தமனத்திற்கெட்டாதெனவுங்கூறினர்.

இ-ம் அகமுள்ளமனதிற்கறியப்படு மெனவும் பகிர்முகமுள்ள மனதிற்கறியப்படாதெனவுந் தெரிவித்ததாம்.

அ-கை.முற்கூறியகடாவிடைகளாற்கோசாரகோசார மின்றிய சுத்தப்பிரமமானசுவானுபூதியேதானென்றறிந்ததினுதிக்குமனதை யதிற்கரைக்கும்பொருட்டோர்சங்கைவினுதல்.

வஞ்சகமில்பரமார்த்தகுருவே சொன்னவழிக ளறிந்தே னினி யோர்வசனங்கேளீர், சஞ்சலமற்றகண்டபூரணமாய்ச் சித்தசிதாகா ரமாவதன்மேருசமாதியோக,மிஞ்சலையொத்தலைவது தன்சுபாவமாகி யொருகணத்திற்பலயுலகாயுதிக்கு மிந்த நெஞ்சகம்வஸ்துவிலாசை யா நிவாததீபநிலைபடைவதெப்படியோ நீர்சொல்வீரே.

இ-ள். வஞ்சகமில் வஞ்சனையின்றியபரமார்த்தகுருவேயதார்த்தமாகவிளங்கியவாசாரியரேசொன்னவழிகளறிந்தேன்தேவரீரனுக்கிரகித்தமார்க்கங்களைத்தெரிந்துகொண்டேன் இனியோர்வசனங்கேளீர்இன்னுமோர் விண்ணப்பங்கேட்கவேண்டும் சித்தம்மனமானது சஞ்சலமற்று சலனமின்றி அகண்டபூரணமாய் அகண்டபரிபூரணஸ்வரூபமாய்த் தாகாரமாவதன்றோதன்மயமாவதன்றோசமாதிபோகம் நிஷ்டையிலுதிகுஞ்ஞானம் உஞ்சலையொத்து ஊசலைப்போல் அலைவது சஞ்சலப்படுவது தன்சுபாவமாகி தனதியல்பால் ஒருக்ஷணத்தில் ஒருக்ஷணத்தில் பலயுலகாயுதிக்கும் நாநாவுலகமாய்த்தோன்றுகின்ற இந்தநெஞ்சகம்இம்மனது வஸ்துவில் பிரமத்தில் அசையாமசலனமின்றியநிவாதீபகாற்றில்லாதவிளக்கைப்போல நிலையடைவதெப்படி நிலைமையைப்பெறுவதெவ்வண்ணம் நீர்சொல்வீர் தேவரீரருள்செய்வீர்-எ-று.

இ-ள்-வெளிப்படை. ௰௫

அ-கை.மனதின்முக்குணமுமவைகளாலுண்டாகும்பயனையுங்கூறல்

கருதுமனோகுணமூன்றுமூன்றிலொன்று கதித்தெழுந்தான்மற்றிரண்டுங்கரந்துநிற்குந்,தருமமிகுசத்துவமேலானபோது சன்மார்க்கமார்க்கமானதெய்வசம்பத்துண்டா, மருவுமிராசதமாகி லுலகதேவாதனையாஞ் சாத்திரவாதனையுமாகு. மருமகனேதாமதமேவாதபோதி லசுரசம்பத்துண்டாகு மறிந்துகொள்ளே.

இ-ள். கருதுமனம் நினைக்கின்றமனதிற்கு கண்மூன்றும் திரிகுணகுணமாம்மூன்றில் அம்மூன்றுகுணங்களில் ஒன்றுகதித் தெழுந்தால் ஒன்றுமிகுந்தெழுமாயின மற்றிரண்டும்பின்னிரண்டுகுணங்களும்கரந்துநிற்கும் மறைந்திருக்கும் தருமமிகும்சற்கருமமுயர்ந்தசத்துவமசத்துவகுணமாவது மேலானபோது மிகுந்தபோதுசன்மார்க்கமான சன்மார்க்கமாகிய தெய்வசம்பத்துண்டாம் தேவச்செல்வமுண்டாகும் மருவு மிராசதமாகில் பொருந்தாநின்ற ரசோகுணமிகுமாயின் உலகலோகவாதனையும் தேக தகவாதனையும் சாத்திரவாதனையும் சாஸ்திரவாதனையும் ஆகும் உண்டாகும் அருமகனே அருமையாகியபுத்திரா தாமதமேலானபோதில்தமோகுணமிகுந்தபோதில்அசுரசம்பத்துண்டாகும்அசுரசெல்வமுண்டாகும்அறிந்துகொள் தெரிந்துகொள்வாய்-எ-று.

அ-கை.சித்தம்சமானசத்துவஞ் சேடிக்கின் மதஞ்சித்தி லசைவின்றி நிற்குமெனல்.

மனதுசத்துவசொரூபமற்றிரண்டும் வந்துகலந்தனவவற்றைமாற்றினற்போந்தனதுசன்மார்க்கத்தைவிடாதிருந்தபோதுமாதமுமிராச

றுவநாசமொன்றும் மைந்தா மாணுக்கனே மேவும்உண்டாகும் தனதானசத்துவமாய் தனதுசுபாவமானசத்துவகுணமாக மனஞ்சேடித்துமனம்விஞ்சிதாமதமிராசதநசித்தல் தமோரசோகுணங்களிறத்தல் சொரூபநாசம்உருவநாசமாம் அனகா மாசற்றவனேசத்துவந்தானும அச்சத்துவகுணமும்இலிங்கதேகமடங்கும்போது சூக்குமசரீரநசிக்கும்போது அடங்குவது நசிப்பதே அரூபநாசம் அரூபநாசமாம-எ-று.

இ-ம். மனமுருவநாசமாயின் சீவன்முத்தியும்அருவநாசமாயின்விதேகமுத்தியுமாமெனக்கூறினதாம். உ௰

அ-கை. உருவமின்றி யருவமாயுணருருவமானமனதினுல்யாவுமனுபவிக்கலாமெனல்.

சுத்தமாஞ்சத்துவமேயுண்மையாகுந் துகளிருள்போனுன்மனமென்சொல்லும்போம்போம்வர்த்தமானத்தில்வந்தவுணவையுண்பார்வருவதுபோவதுநினைந்துமகிழார்வாடார், கர்த்தராம்சந்தைவிட்டகர்த்தராகிக் கரணவிருத்திகளமைத்தகாண்பராகி, முத்தராயிருக்கலுமாம்புசிப்புங்கூடு முட்டிலையென்றறிந்துசங்கைமோசிப்பாயே.

இ-ள். சுத்தமாஞ்சத்துவமே களங்கமற்றசத்துவகுணமேஉண்மையாகும் தத்துவமாம்துகளிருள்போனுல்ரசோதமோகுணங்கணீங்கினுல் மனமென்சொல்லும் போம்போம்மனமென்றுரைப்பதுநீங்கும்வர்த்தமானத்தில்நிகழ்காலத்தில்வந்தவுணவை யுண்பார்கிடைத்தவுண்டியைப்புசிப்பார்கள் வருவதும்எதிர்காலத்துவரும்பொருளையும் நினைந்துமகிழார்கருதிமகிழார்கள்போவதும்செல்காலத்திற்போனபொருளையும் நினைந்துகருதிவாளார்வாளார்கள்கர்த்தராமகந்தையைவிட்டுயானெனவென்னும்மகந்தையைநீக்கிஅகர்த்தராகிகரணவிருத்திகள் அந்தக்கரணவிருத்திகளையும் அவத்தைஅர்த்தராய அவஸ்தாத்ரயங்களையும் காண்பாராகிபார்ப்பவர்களாகி முத்தருமாயிருக்கலுமாம்சீவன்முத்தராயிருக்கலுமாம்புசிபபுங்கூடும்எல்லாவற்றையுமனுபவிக்கவுங்கூடும் முட்டிலையென்றறிந்து தடையில்லை யென்றறிந்து சங்கைமோசிப்பாய் சங்கையைநீக்குவாய்-எ-று

இ-ம். சத்துவமான மனதினுலெவற்றைப் புசிக்கினு மவைகளால்வருஞ் சுகதுக்க மிவர்க்கிலவென்பதாம்.

அ-கை மனஞ்சத்துவமாக விவகரிக்கின்சமாதி பெங்ஙனங்கூடுமென்றவினுவிற்குத்தரம்.

விவகாரவேளையெல்லாஞ்சமாதியென்று விகற்பமன்றேமனமலைந்துவிடாதேவிட்டா, லவதானநழுவுமன்றேவென்றுபாகி லதற்கொருதிட்டாந்தங்கேளாசைகொண்டு,நவமாகப்பரபுருடன் தன்னைக்கூடி நபந்துசுகமனுபவித்தநாரிநெஞ்சந், தவமான மனைத்தொழில்கள் செய்யும்போது தழுவியனுபவித்தசுகந்தனை விடாதே.

இ-ள். விவகாரவேளையெல்லாம் விவசரிக்குங்காலங்களனைத்தும் சமாதியென்றால் சமாதியென்றுசொன்னால் விகற்பமென்றோ அவ்விவகாரந்திரிசியவேறுபாட்டைத் தோற்றுவிக்குமன்றோ மனமலைந்துவிடாதோ அங்ஙனமாயின் மனஞ்சஞ்சலத்தைவிடாதோ விட்டால் அங்ஙனஞ்சலத்தையுடையுமாயின் அவதானநழுவுமன்றோ ஞானநழுவுமன்றோ என்றுபாகில் என்றுகேட்டபாயாகின அதற்கு அத்தோட்டரந்தத்திற்கஒருதிஷ்டாந்தங்கேள்யாமொருதிட்டாந்தஞ் சொல்லுதும்கேட்பாய் ஆசைகொண்டு காமமுற்று நவமாக நூதனமாக பரபுருடன்றன்னை சேர்ரபுருடனைகூடிநயந்து இன்புற்றுப்புணர்ந்த சுகமனுபவித்தவிடயானந்தத்தையனுபவித்த நாரிநெஞ்சம்வஞ்சியின்மனமானது தவமானதவத்துக்குரிய மனைத்தொழில்கள் இல்வாழ்க்குரியசெயல்களை செய்யும்போதும்செய்யுங்காலத்தும் தழுவியனுபவித்தசுகந்தனைமுன் கூடியனுபவித்தவிடயானந்தத்தை விடாதுநீங்காது-எ-று.

ப-ம். நெஞ்சஞ்சுகந்தனைவிடாமென்பதைச்சுகநெஞ்சந்தனைவிடாதெனப்பொருள்கொள்கமனதைவிழங்குவதுசுகமாதலின்.

இ-ள். விவகாரங்களைச் சத்துவந்தினுதயமானசுகபோதம்விழுங்கிக்கோடலினவ் விவகாரஞ்சமாதியேயாமென்பதாம். உஉ

ஆ-கை. விவகாரங்களில் காமபாவநீங்குதற்பொருட்டுச்சிற்சுகமானசீவன்முத்தராது சத்துவமானமனதிற் சுகங்கூடுமோவென்றவினுவிற்குத்தரமாக விரதத்ரயங்கூறல்.

தேகத்தலனனுகியகர்த்தனுகிச் சீவனின்றிப்பிரமமாய்த்தெளிந்தமுதன், போகத்தையுண்பனென்றாற்கர்த்தாவாமே பூரணமாம்கர்த்தனுக்குப்போகமுண்டோ, சோகத்தையருத்தருளுங்குருவேயிந்தத்துகளறுக்கவேண்டுமென்றுசொன்னயாகின்,மாகர்த்தன்மாபோகமாந்தியாகி வகைமூன்றுயவரிருக்குமகிமைகேளாய்.

இ-ள். தேகத்தலனனுகி உடல்நானென்பதல்லாதவனுய் அகர்த்தனுகிஅசர்த்தாவாய் சீவனின்றி சீவேஸ்வரத்துவமில்லாமல் பிரமமாய்கூடஸ்தரம்மைக்கியமாகி தெளிந்தமுத்தன்தெளிந்தசீவன்முத்தனவன் போகத்தையுண்பனென்றால் விடயபோகங்களைப்புசிப்பானென்றால் கர்த்தாவா மேயனென்பவனுமே பூரணமாம் கர்த்தனுக்குபரிபூரணமானகர்த்தாவுக்குபோகமுண்டோவிடயபோகமுளவோசோகத்தையறுத்து துன்பத்தைக்கெடுத்து அருளுங்குருவே இன்பத்தைக்கொடுக்கின்ற வாசாரியரே இந்தத்துகளறுக்க வேண்டுமென்று இக்குற்றத்தைநீக்கவேண்டுமென்றுசொன்னயாகில்கேட்

பாயாகில்மாகர்த்தன்மாகர்த்தனும்மாபோகிமாபோகியும் மாத்தியா கிமாத்தியாகியுமாகிய அவருமூன்றும்மூன்றுவித்மாக அவரிருக்குமகி மைகேளாய் அச்சீவன்முத்தர்களிருக்கின்றபெருமையைக்கேட்பா ய் எ-று.

இ-ள். கர்த்துவமின்றியகர்த்தத்துவமானசீவன் முத்தருக்குப் போகங்கூடுந்தன்மை யெங்ஙனமென்றவினாவிற்குத்தரங்கூறத்தொ டங்கினதாம். ௨௫

அ-கை. மாகர்த்தனிலக்கணங்கூறல்.

செய்கையுஞ்செய்விக்கையுமற்றிருக்குங்காந்தற் சிலைமலைமுன் னிரும்புகள்சேட்டிக்குமாபோற், செய்கையுஞ்செய்விக்கையுமற்றிரு க்குமென்முன்சடமானவுலகமெல்லாஞ்சேட்டைசெய்யு, மெய்கலந் தவிந்திரியவிகாரரூபவிவகாரவிருத்திக்குவிருத்திதானு, மெய்கலந்த சமாதிக்குஞ்சாக்ஷியேநான்வெயில்போலென்றுறைத்தவனேவிபுமா கர்த்தன்.

இ-ள். செய்கையும்தொழில்செய்தலும்செய்வித்தையும்தொ ழில்செய்வித்தலும்அற்றிருக்கும்இல்லாதிருக்கின்றகாந்தச்சிலைமலை முன்காந்தக்கலலின் சந்நிதானத்தில் இருமபுகள் அயங்கள் சேட் டிக்குமாபோல் அசையுமாபோல் செய்கையுஞ் செய்விக்கையும் பி ரேரகப்பிரேரியங்கள் அற்றிருக்கும் இல்லாதிருக்கின்றன என்முன் எனதுசந்நிதியில்சடமானவுலகமெல்லாம் சடமாயுள்ள சகங்களனை த்தும் சேட்டைசெய்யும் அசைந்துகொண்டிருக்கும் மெய்கலந்த தேகத்திற்சேர்ந்த இந்திரியஞானேந்திரிய கன்மேந்திரிய விகாரரூப பேதரூபங்களான விவகாரவிருத்திக்கும் பிரேரக பிரேரியமானவிரு த்திகளுக்கும விருத்திதானுய் அவ்விருத்திகளடங்கித்தன்மயமான மெய்கலந்தசமாதிக்கும உண்மைகலந்திருக்கும ஸ்வரூபசமாதிக்கு ம வெயிலம்போலென்று சூரியகிரணத்தைப்போலச் சர்வசாக்ஷியே நானென்று உறைத்தவனே ஸ்திரமானவனேவிபுசர்வவியாபகமாகி ய மாகர்த்தன்மாகர்த்தனும-எ-று.

இ-ம். அத்துவிதமானவென்று சந்நிதியினடக்குந்தேகமுதலி யவிவகாரங்களுக்குமிவைகளிறந்துநின்ற ஞானசமாதிக்குஞ்சாட்சி தானேயெனறவைகளோடுங் கூடாமற் கூடியிருப்பவனே மாகர்த்த னென்பதாம. ௨௬

அ-கை. மாபோகிமாக்களி னிலக்கணங்கூறல்.

அறுசுவையின்குணங்குற்றம்சுத்தஞ்சுத்த மசத்தியம்பத்திய மெனவூணுப்பந்திடாமற, பொருமையுடன்கிட்டினதைக் காட்டுத்தீ ப்போற்பாகங்களபுசிப்பவன்மாபோகியாகுஞ், சிறிதுவலிதுகடன் தனியங்கண்மை தீமைகள்சேரினும்படிகச செயல்போற்சித்தம், வெறுத்திருக்கும்மாத்தியாகியாவான விரதமிம்மூன்றுள்ளவரே வீடுள்ளோரே.

இ-ள் அறுசுவையி நடுவிரதங்களின் குணங்குற்றம் குணகுணங்கள் அசுத்தஞ்சுத்தம் சுத்தாசுத்தங்கள் அபத்தியம்பத்தியமெனபத்தியாபத்தியங்களென் ஊணையாய்ந்திடாமல் உணவையாராய்ந்து பாராமல் பொறுமையுடன் சாந்தத்தோடும் கிட்டினதை நேரிட்டதை காட்டுத்தீப்போல காடாக்கினிபோல போகங்கள் புசிப்பவன் போகங்களையனுபவிப்பவன் மாபோகியாகும் மாபோகியாம்சிறிதுவலிதுகள் அற்பமகத்துக்கள் கனதன்னியங்கள் அன்னியான்னியங்கள்நன்மைதீமைகள் நன்குதீங்குகளாகியவிவைகள் சேரினும்அடைந்தாலும்படிக்கச்செயல்போல்படிக்கத்தின் றன்மையைப்போல சித்தம்சித்தமானது வெறிதிருக்குமவனேபற்றின் றிநிற்பனே மாத்தியாகியாவான் மாத்தியாகியாவான்விரல்மூன்று இம்மூன்று விரதங்களும் உள்ளவனே உடையவர்களேவீடுள்ளோர் முத்தியையுடைய சீவன்முத்தர்கள்-எ-று.

இ-ம். உணவின் சாரங்களைப்பாராமற் றனதுரசமாக யாவையும் புசிப்பவனேமாபோகியெனவும் தன்னிடத்திற் றனக்கன்னியமானவைக ளியாதுபற்றினுந் தான்பற்றின் றிச் சுயமாவிளங்குகின்றவனே மாத்தியாகியெனவுங்கூறினதாம்.

அ-கை. சீவன்முத்தன்விவகரித்துக்கொண்டிருக்க வகுதின்றிக்கிருத்தியனான தெங்ஙனமெனவினாதல்.

மெய்யுங்கொண்டுபிராரத்வந் தருவிதிவழிநின்றிடவு
முய்யுங்கன்மிகளுக்கனுகுணமா வுறுதொழில்செய்திடவுஞ்
செய்யுஞ்செய்கைமுடிந்தவனென் றுரைசெப்புவதெப்படியோ
நையுந்துன்பமகற்றியகுருவே நலமாவருள்வீரே.

இ-ள். மெய்யுங்கொண்டுதேகத்தைத்தாங்கிக்கொண்டுபிராரத்வந்தரு பிராரத்வகனமங் கொடுக்கின்ற விதிவழி நின்றிடவும்நியதிமார்க்கத்தினித்தவும் உய்யுங்கன்மிகளுக்கு முமூட்சுகளுக்கு அனுகுணமா அனுகூலமாக உறுதொழில்செய்திடவும் பொருந்திய சிரவணாதிகளைச்செய்துகொண்டிருக்கவும் செய்யுஞ்செய்கை முடிந்தவனென் றகிருத்தியனென் றுஉரைசெப்புவதெப்படி சொல்லுவதெவ்வண்ணம் நையுந்துன்பம்வருந்தும் பவத்துன்பத்தை அகற்றியகுருவேநீக்கியவாசாரியரேநலமாவருள்வீர்நன்மையாகச்சொல்வீர்-எ-று.

இ-ம். வெளிப்படை.

அ-கை. அவ்வினாவிற்குத்தரங்கூறல்.

ஆடவர்செய்தொழின்மூவகையாகு மவித்தைவசத்துருநா
வீடம்மதையகந்தையுளார்க்கேயிகபரவிவகாரம்
வீடுறுதுவமெனுமிச்சையுளார்க்கேவித்தைபடிப்பவெலாம்
பாடனமிதுதொழிலாற்பலனுண்டோ பரிபூரணமானால்.

இ-ள். ஆடவர்செய்தொழில் புருஷர்கள் செய்கின்றகிரியையா
னதுமூவகையாகும் மூன்றுவிதமாம்அவித்தைவசத்துறுநாள் அஞ்
ஞானவசமாய்ச்செல்கின்றகாலத்தில் ஈடணைஈஷணைக் திரியமும்மம்
மைமமதையும்அகந்தை அகந்தையும் உளர்க்கேஉள்ளவர்களுக்கே
இகபரவிவகாரம் இகலோகபரலோகவிவகாரங்களுளவாம் விடணு
குவமெனுமிச்சையுளார்க்கு முமூட்சுகளுக்கு வித்தை படிப்பவெ
லாம் சட்சித்தைப்பகுத்தறியுஞ்சாஸ்திரங்களனைத்தையுமப்பியாசி
த்தலுளவாம்பரிபூரணமானல்பரிபூரணமானவர்களுக்குபாடன்மிகு
ந்தொழிலால் மிகுந்த சாஸ்திராப்பியாசத்தினல் பயனுண்டோபய
னுளதோ-எ-று.

இ-ம். அஞ்சானத்திசையி லுலகவிவகாரங்களு முமூட்சை தி
சையிற்சிரவணுதிவிவகாரங்களுமுளவாம் முத்திசையிற் பலவாயாப்
தியின்றிவிர்த்தியாபதிகா விவகாரங்களைச்செய்தலினவையுஞ் செய்
துஞ்செய்திலரென்பதாம்.

அ-கை.சீவன்முத்தர்க்குலகவிவகாரங்களுளவாயினஞ்சிரவணு
திவிவகாரங்கள் வேண்டாவோவெனவினுதல்.

குரவர்சிகாமணியேநீர்கேளீர் கூறினவழியொக்கும்
பரமுடனிசமுமிழந்தவரன்றோ பழகுவர்மெய்ஞ்ஞானம்
விரவுமுயற்சியின்மீண்டவாதையினிவேண்டுவரோவேண்டார்
சிரவணமன்னுதிகள்வேண்டாவோசித்தமுரைந்திடவே.

இ-ள். குரவர்சிகாமணியேதேசிகசிரோரத்னமேகேளீர்கேட்ட
ருள்வீர் நீர்கூறினவழியொக்கும்தேவரீரருளிச்செய்தமுறைசரியே
பரமுடன் பரலோகவிச்சையோடும் இசமும் இகலோகவிச்சையை
யும்இகழ்ந்தரன்றோ நீங்கினமுமூட்சுகளுள்ளோமெய்ஞ்ஞானம் உ
ண்மைஞானத்தை பழகுரீர் அப்பாசிப்பளவால் விரவுமுயற்சியின்
மீண்டவர் கலக்கின்ற முயற்சியினின்றுநீங்கினவர்கள் அதை அவ்வி
வலோகபரலோகவிச்சையைவேண்டுவரோவேண்டார் விரும்புவார்க
ளோ விரும்பார்ஆயினும் சித்தமுரைத்திடமனநிலைபெரும்பொருட்
டு சிரவணமன்னுதிகள் வேண்டாவோ சிரவண மனனமுதலியவைவந்
தும்வேண்டாமோ-எ-று.

இ-ம். வெளிப்படை.

அ-கை. அவ்வினுவிற் குத்தரங்கூறல்.

கிளர்மகனேகேள்தத்துவமறியாற் கேட்டல்சயக்கடனே
தளர்வறுசிந்தித்தலின்முயல்வார் சிலர்சந்தேகங்களுளார்
தெளிதனிற்பார்விபரீதப்பேய் தீராவாதனையோர்
வெளியுருவாயறிவாய்நி றைவாயினர்வேண்டுதொன்றுண்டோ.

இ-ள்.இளமகனே விளங்காநின்ற புத்திரனேகேள் கேட்கக்கடவாய்தத்துவமறியார் உண்மைஞானத்தைத்தெரியாதவர்கள்கேட்டல்செய்யக்கடன் சிரவணஞ்செய்யவேண்டியதுகடமையாம்சிலர்சந்தேகங்களுளாற் கெட்டவஸ்துநிச்சயத்திற்சந்தேகமுள்ளவர்களாகியசிலர் தளர்வறுசிந்தித்தலின்முயல்வார் தளர்வற்றிருக்கும்படிமனனஞ்செய்தலின்முயற்சிசெய்வார்கள்விபரீதப்பேய் ஒன்றை யொன்றைவரியும்பேய் தன்மையுள்ள தீராவாதனையோர் நீங்காத வாதனையை யுடையவர்கள்தெளிதலினிற்பார் நிருத்தியாசனத்தைக்கொண்டு சமாதியிலிருப்பார்கள் வெளியுருவாய் பரமகாசமாய் அறிவாய் அபரோட்சஞானமாய் நிறைவாயினர் பரிபூரணமானவர்கள்வேண்டுவதொன்றுண்டோ விரும்புவதொன்றுளதோ-எ-று.

இ-ம். கேட்டன்முதலியமூன்றுவிவகாரங்களு மஞ்ஞானமுதலியமூன்றுமுள்ளமட்டும் வேண்டுமேயன்றி மேல்வேண்டப்படுவனவல்லவென்றதாம்.

அ-கைவிவகாரநீங்கிற்சீவன்முத்தர்க்கெங்ஙனமகம்பாவமுண்டாதல் கூடுமெனவினாதல்.

ஐயாகேளீர்தத்துவஞானியு மஞ்ஞானிகள்போலச்
செய்யாநின்றேன்கண்டேனுண்டேன் சென்றேனெனலாமோ
பொய்யாம்விபரீதங்களவர்க்குமுத்திபோயினதென்றீரே
மெய்யாம்பிரமவிகாரமிதன்றேவெளியாயுரைவீரே.

இ-ள். ஐயாகேளீர் எனதாசிரியரேகேட்டருள்வீர்தத்துவஞானியும்மெய்யுணர்வுடையசீவன்முத்தனும் அஞ்ஞானிகள்போலஅஞ்ஞானிகளைப்போல செய்யாநின்றேன் இதைச் செய்கின்றேன் கண்டேன் இதைப்பார்த்தேன் உண்டேன் இதைப்புசித்தேன் சென்றேன் இங்ஙனஞ்சென்றேன் என்னலாமோ என்றுசொல்லலாமோ அவர்க்குஅச்சீவன்முத்தர்களுக்கு பொய்யாம் விபரீதங்கள் அசத்தியமானபேதபாவனைகள் போயின சென்றீரே நீங்கினதென்றருளினீரேமெய்யாம்தத்துவமானபிரமவிகாரம் பிரமவிகாரமானது இதன்றே இதுதன்றே வெளியாயுரையீர் நன்றாகத் தெரியும்படி சொல்வீர்-எ-று.

இ-ம். சீவன்முத்தனும் ஞானிகளைப்போல விவகரிக்கின்றவர்களுக்கு விபரீதமெங்ஙன நீங்கிற்றென வினவினதாம்.

அ-கை-அவ்வினாவிற்குத்தரங்கூறல்.

ஓய்ந்தமனைவிற்கண்ட பழங்கதைபோனுவன்வாதனையா
வாய்ந்தமிவற்றவனப்படி செப்புவனுபாசனுமாகான்
மாய்ந்ததனுடன்மனவும் விண்ணவன்வனிதனெனப்படுவான்
வீய்ந்தசிதாபாசன்போமளவும் விவகாரந்தொடரும்.

இ-ள். ஓய்ந்த இந்திரியங்களொழிந்த கனவிற்கண்ட பழங்கதைசொற்பனத்திற்கண்டபழங்கதையைவாசனையால் வாதையினால் ஒதுவன்சாக்கிரத்திற்சொல்லுவன் அதுபோல ஆய்ந்தறிவுற்றவன் வேதமுடிவானமகாவாக்கியார்த்தத்தையாராய்ந்து தன்னையறிந்தசிவன்முத்தன் அப்படிசெப்புவன் அத்தன்மையாகசொல்லுவன் ஆபாசனுமாகான் சிதாபாசனுகான் மாய்ந்ததனுடல்வேமயவும் மரித்ததேகந்தனமாகும்பரியந் தம்விண்ணவன்தேவனுயினேன் மனிதனெனப்படுவான் மனிதனென்றுசொல்லப்படுவான் அதுபோலவீய்ந்தசிதாபாசன் சித்துருவமகாசித்தசிதாபாசன் போமளவும் விதேகமுத்தியையடையுமளவும் விவகாரந்தொடர்ந்துவரும்-எ-று.

இ-ம். சொற்பனத்திற்கண்டகற்பிதத்தைச்சாக்கிரத்திற் சொல்வதுபோல வஞ்ஞான திசையிற்கற்பிதமாயுள்ளவுலகவிவகாரத்தை ஞானதிசையிற்சொல்வதேயன்றி யுண்மையன்றெனினும் வைவிதேகமுத்திபரியந்தந் தொடருமென்பதாம்.

அ-கை. சகலவிவகாரநீங்கச் சமாதிசெய்யெனச் செயினுமோர் விவகாரமாதலி லவனெங்ஙன நீர்விவகாரியாவனெனல்.

ஆனலையாகுருவே காண்பதுசத்தியமென்றாலு
நானாவிவகாரந்தயரல வேல்ஞானசுகந்தருமோ
போனாலன்றோநன்றாநிட்டை புரிந்திடல்வேண்டாவோ
தானாநிட்டைபுரிந்தாற்செய்கை தவிர்ந்தவனெப்படியோ.

இ-ள். ஆனலையாகுருவே அப்படியானாலென்விதாவாகியவாசிரியரே காண்பதுதிரிசியம் அசத்தியமென்றாலும் பொய்யாயினும் நானாவிவகாரம் அதைப்பற்றிய பலதொழில்கள் துயலவேதுன்பத்தை தருபவைகளல்லவாஞ்சனசுகந்தருமோ சிதானந்தத்தைக்கொடுக்குமாபோனாலன்றோ அத்தொழி நீங்கினாலல்லவா நன்றாம் நன்மையாம்நிட்டை அவைகநீங்கும்பொருட்டுசமாதிபுரிந்திடல்வேண்டாவோ செய்யவேண்டாமோ தானா நிட்டைபுரிந்தால் தன்மையாகுஞ்சமாதிசெய்தால் எப்படி எவ்விதம் செய்கைதவிர்ந்தவன் தொழில்விட்டவன்-எ-று.

இ-ம். வெளிப்படை அ-கை அவ்வினாவிற்குத்தரம்.

தெரிதருமகனேயாரம்பத்தொடுதிரும்விவகார
முரியசமாதிலவ் விவகாரங்களுமுள்ளத்தொழிலன்றோ
துரியபரம்பொருளானவர்வேறொருதொழில்செய்வதுமுண்டோ
வரியசமாதிகள்பழகுவேனேனேலவனாருட னுமன்றே.

இ-ள். தெரிதருமகனே உண்மையாகியயறிகின்றபுத்திரா உரிய உரியசமாதியுந்தனக்குரியநிட்டையும்விவகாரங்களுஞ்சத்ததொழில்களும்உள்ளத்தொழில் மனோவிவகாரங்களாதலால் விவகாரம் அத

தொழில்கள் ஆரம்பத்தொடுதீரும் சிரவணாதிகளாற்றீரும் ஆரியபரம்பொருளான துரியமான பிரமவஸ்துவானவர்கள் வேறொருதொழில் மற்றொருகிரியை செய்வதுமுண்டோசெய்வதுமுளதோ அரியமாதிகள் அருமையானஞானநிஷ்டைகளை பழகுவனேல்அப்பியாசிப்பானுகில்அவன் அவ்வப்பியாசி ஆரூடனுமன்று அனுபவியல்லன் எ-று. சகதவிவகாரஞ் சமாதியினுஞ்சமாதிவிவகாரஞ் சாட்சாத்காரத்தினு நீங்குமெனக்கொள்க இ-ம். சித்துவிகாரமான சமாதியுமப்பியாசிக்கே யன்றி யாரூடனுக்கின்றென்பதாம். ருரு

அ-கை. ஆரூடர்களினுஞ் சிலர்சமாதிமுதலியவற்றைச் செய்வதென்னென விஞதலுக்குத்தரம்.

உத்தமகுருவேயாரூடருமா யொழிலற்றவருள்
சித்தமடங்குதியானுதிகள்சிலர் செய்குவதென்னென்று
வித்தலமருவும்பிராரத்வப்பிறி வெப்படியப்படியே
முத்தரும்வெகுவித மாகுவரென்பதுமுன்னேசொன்னேனே

இ-ள். உத்தமகுருவே-நன்மையானதேசிகரே, ஆரூடருமாய் சுவானுபவமுள்ளவர்களுமாய் ஒருதொழிலற்றவருள்-ஒருகிரியையில்லாதவர்களுக்குள் சித்தமடங்கு-மனமடங்குகின்ற தியானுதிகள்-சமாதிமுதலியவைகளை சிலர்-சிலர்கள் செய்குவதென்னென்றால் செய்வதென்னென்றுகேட்பாயாகில் இத்தலமருவும் இப்பூமியிற் பொருந்தும் பிராபிராரத்வப்பிரிவுபிராரத்தகன்மம் பகுப்பு-எப்படி-எவ்விதமோ-அப்படியே-அவ்விதமேயாம்முத்தரும்-சீவன்முத்தரும் வெகுவித மாகுவரென்பது நானுவிதமா யிருப்பார்களென்பதை முன்சொன்னேன்-முன்னமேசொன்னேன்-எ-று.

இ-ம்.ஆரூடன்றொழில்பிராரத்வகன்மமெனவறிகவென்பதாம்.

அ-கை இ-து.

நல்லவனேகேளுலகு காரா ஞானிகள்விவகார
மல்லதுவேறொரு பெறுபேறும்மில்லை யதனுற்பிணியுமிலை
வல்லசிருட்டி முதற்பலதொழிலால் வருபுண்ணியபாவ
மெல்லவருக்கு மனுக்கிரகஞ்செயு மீசனமைந்திலனே.

இ-ள். நல்லவனேகேள்-நன்மையான மாணுக்கனே கேட்பாய் ஞானிகள்விவகாரம்-ஞானவான்கடொழில் உலகுபகாரமல்லதுலோகோபகாரநிமித்தியமேவேறொரு-மற்றொருபெறுபேறுமில்லை அடையக்கடவதாய் பயனென்றுமில்லை அதனுல்-அக்கிரியையினுல்-பிணியுமில்லை துன்பமுமில்லை அஃதெங்ஙனமென்னின் வல்லசிருட்டிமு

தல்வல்லமையானசிருட்டியாதி பலதொழிலால் நானுவிதகிருத்தியங்களினுல்வரு புண்ணியபாவம்-வராநின்றதருமா தருமம் எல்லாருக்கும்-யாவருக்கும் அனுக்கிரகஞ்செய்யும்-அளிக்கின்ற| ஈசனடைந்திலன்ஈசனடைகிலன்-எ-று.

இ-ம். ஆருடன்செய்யுந்தொழி லீசனைப்போனுலகோபகார நிமித்தமேயன்றி தன்னிமித்த மன்றென்பதாம். ரு௫

அ-கை, வஞ்சகமில்லென்ற செய்யுண்முத லிதுகாறுஞ் சித்தினுத்தமனஞ்சலனமின்றிச் சித்தாகவிளங்குவ தென்பதைவிளக்கினிச்சித்துவியாபகத்தை விளக்கும் பொருட் டம்மனமுள்ள ஞானவானினுக்கொப்பாவெனக் குறிப்பாககூற வெங்ஙனமொப்பாவனென்ற வினுவுக்குத்தரம்.

ஈசனுமாயுருவாகி யெழுந்தருளுங்குருவே
யீசனியாணியுமொப்பென் றீரே யெப்படியொப்பென்று
லீசனுஞானியு மமதையகந்தை யிகந்திறலொப்பா
மீசனுமாப்பல சீவருமாமுல கெல்லாமிவனுமே.

இ-ள். அருவாய் நிஷ்களமாய் ஈசனுமாய்-மும்மூர்த்தியுமாய்உருவாய் மானிடவடிவாய்எழுந்தருளுங் குருவே-யெழுந்தருளு மாசிரியரே ஈசனும் மாயாரகிதரான மும்மூர்த்திகளும் ஞானியும்-ஞானவானும்ஒப்பென்றீரேசமானமென்றீறே எப்படியொப்பென்றுல்-எவ்விதஞ்சமானமாமென் றுகேட்பாயாகில்ஈசனும்ஈஸ்வரனும்ஞானியும்ஞானவானும் மமதை-யகந்தை-மமதையு-மகந்தையும்-இச்சந்தினுல் நீங்கிநிற்றலால் ஒப்பாம்-சமானமானவர் இவன்-இந்தஞானி-ஈசனுமாம்-மும்மூர்த்தியுமாவன் பலசீவமாம்-அந்த சீவர்களுமாவன் உலகெல்லாம்-சகங்களனைத்தும் ஆம்-எ-று.

இ-ள். அறிஞனீசனுக்கொப்பாவ னென்பதற்கேதுகூறிமற்றுஞ் சிவேஸ்வரசத்தாவும் விளங்குவானெனக் கூறினதாம். ரு௬

அ-கை, அறிஞனெங்கனஞ்சீவர்களாகவிளங்குவானெனவினுதல்.

எல்லாஞ்சீவரு மிவனுமென்றீ றிவன்றான்முத்தியடைந்
தெல்லாஞ்சீவரு முத்திபெறும லிருப்பானேனையா
வெல்லாஞ்சீவரும் வெவ்வேறுனு லிவனெல்லாமவனே
யெல்லாப்பொருளுமுரைத்தருள் குருவேயிதைநீர்மொழிமீரே.

இ-ள். எல்லாச்சீவரும் சகலசீவர்களும் இவனுமென்றீர்-இந்தஞானியாவனென்றுசொன்னீர்இவன்றான் இந்தஞானிமுத்தியடைந்துவீட்டையஎல்லாசீவரும்-சகலசீவர்களும் முத்திபெறுமல் வீடடையாமல்இருப்பானேன்-இருப்பதென்னஐயா-ஆசிரியரேஎல்லாச்

சீவரும்-சகலசீவர்களும்வெவ்வேறால் தனித்தனியாயிருப்பாராயி ன்-இவன் இந்தஞானி-எல்லாமவனே-அனைத்து மாகானே-எல்லாப் பொருளும்சர்வார்த்தங்களையும்உரைத்தருள்குருவே அருளுகின்ற தேசிகரே இதைநீமொழியி ரிச்சங்கைக்குத்தாயந்தேவரீரருள்செய் வீர்-எ-று. முத்தியடையவென்பது அடைந்தெனத்திரிந்துநின்றது.

இ-ம். ஞானவானாகியவொருவன் பெற்றபேற்றினையுயிர்கள்பெரு மையாலிவனெல்லாமாவதென்பதெங்ஙனங்கூடுமெனவினவினதாம்

அகமெனுமான்மா பூரணமேக மநேகவிதஞ்சீவ
னகமெனுமந்தக் கரணவுபாதிக ளளவில்லையாதலினாற்
சகமுழுதுங்குளிர் சந்திரனேகஞ் சலசந்திராபலவாஞ்
சகமதிலேறி குளஞ்சிறுகுழிகால் சட்டிகுடம்பலவால்.

இ-ள். அகமெனுமான்மா-நரனென்னுமாத்மாவானது பூரண மேகம் பரிபூரணமானவொன்றும் அகமெனும் நானென்கிற அந்தக் கரணவுபாதிகள் மனோபாதிகள் அளவில்லை-மட்டில்லை- ஆதலினால்-ஆ தலால் சீவன்சிதாபாசன்-அநேகம்விதம்-நானாவிதங்களாம்சகமுழு தும் உலகமனைத்தும்-குளிர்-குளிர்ச்சிசெய்கின்ற- சந்திரனேகம்-ம தியொன்றி-சகமதில் உலகத்தின்கண்-ஏரி-ஏரிகளும் குளம்-தடா கங்களும்-சிறுகுழி சிறியபள்ளங்களும் சால்-சால்களும்-சட்டி-சட் டிகளும்-குடம்-குடங்களும்-பலவால்-பலவாதலால் சலந்திரர்பலசல ப்பிரதிபிம்பரான சதிரர்களு மனந்தமாம்-எ-று. ரு அ

அகை-இ-து.

சட்டிகுடங்களி லொன்றுநசித்திட வதனுட்சலனந்த்ர
னொட்டுமுதற்சந் திரனோடுகூடு மொழிந்தவைகூடாவே
கட்டுமுபாதி நசித்திடுசீவன் காரணவான்மாவிற்
கிட்டுமெய்க்கிய முபாதிகெடாதவர் கேவலமாகாரே.

இ-ள் சட்டிகுடங்களில்-சட்டிகுடமுதலியவைகளினொன்றுந சித்திடஒன்றுகெட்ட-அதனுட்சலசந்திரன்- அதற்குட்டோன்றிய பிரதிபிம்பசந்திரன்-ஒட்டும்பொருந்தியமுதற்சந்திரனோடும்கூடும்பி ரமசந்திரனோடுசேரும்-ஒழிந்தவை ஏனையகூடாவே-கூடாவா மவை போலகட்டுமுபாதி-பந்தித்திருக்குமறியாமை நசித்திடுசீவன்-மரித்த சீவனானவன்காரணவான்மாவில்- ஆதாரமான வாத்மஸ்வரூபத்தில்கி ட்டுமெய்க்கியம்ஐக்கியமுண்டாம் உபாதிகெடாதவர்-அவித்தை-நீங் காதவர்கள்கேவலமாகார்-கைவல்லியத்தையடையமாட்டார்கள்.

இ-ள்-க-ம், ஓர்கட்சலநசிக்கினதிற் பிரதிபிம்பித்தசந்திரன்பிம்பச்சந்திரனானவனன்றியேனை பிரதிபிம்பச்சந்திரர்களாகார்போலவொர்வித்தை நசுக்கினதின்றோன்றிய சீவன்சிவமாவனேயன்றி யேனைய சீவர்களாரென்பதாம். ௩௬

அ-கை, முன்பறிஞானனீசனுக் கொப்பென்றீரங்ஙனமாயின வாமகிமைஇவனுக்கே யின்றெனவினுதல்.

இவனயன்மால்சிவ னாகியவீசரோ டெப்படியொப்பாகுஞ்
சிவன்முதன்மூவரு மகிலசிருட்டித் திதிநாங்கள்செய்வா
ரவர்பிறர்மதிகளு முக்காலங்களு மறிவார்விபுவாவார்
தவமிகுகுருவே யிவனுக்கவைபோற் சற்றுங்காணேனே.

இ-ள். இவன்-இந்த ஞானி-அயன்மால் சிவனாகியபிர்மாவிஷ்ணுருத்திரராகிய-ஈசரோடு-மும்மூர்த்திகளுடன் எப்படியொப்பாகும்எவ்விதஞ் சமானமாவன் சிவன்முதன் மூவரும் ருத்திரன் முதலிய மும்மூர்த்திகளும்-அகிலம்-சகத்தை-சிருட்டி-உண்டாக்குதலும்-திதி-இரட்சித்தலும் நாங்கள் அழித்தலும் செய்வா-செய்வார்கள்-அவர்-அவ்வீஸ்வரர் பிறமதிகளும் பிறரறிவையும் முக்காலங்களும் திரிகாலங்களிலும்அறிவார்-தெளிவார் விபுவாவார்-வியாபகமாவார்கள் தவமிகுகுருவே தவத்தின்மிகுந்த ஆசிரியரே இவனுக்கு இந்த ஞானிக்கு அவைபோல்அவற்றைப்போல சற்றுகாணேன்-எவ்வளவும் பாத்திரனல்லன்-எ-று.

இ-ம். வெளிப்படை.

அ-கை, அவ்வினுவிற்குத்தரம்.

தடத்துநீர்நிலாத் திரியெரிபயமுந் தழுவமூர்தனைக்காக்குங்
குடத்துநீர்விளக்கினிலொளியிரண்டுமோர் குடும்பமாத்திரங்காக்கு
மடுத்தமைந்தனேஞானியுமீசனுமறிவினுற்பிரிவில்லைக் [மால்
கெடுத்தமாயையின்குணங்களான் மேலென்றுங்கீழென்றும்பிரிவா.

இ-ள். தடத்துநீர்-தடாகத்துசலமும்நிலாத்திரியெரி-பகல்வர்த்தியுமாகிய உபயமும் இரண்டும் தழுவமூர்தனைக் காக்கும் பொருந்தியவூர்தனைரட்சிக்கும்-குடநீர்-குடத்துசலமும் விளக்கினிலொளி தீபப்பிரகாசமுமாகிய இரண்டும்-உபயமும்-ஓர் குடும்பமாத்திரங் காக்கும்ஒருகுடும்பத்தை மாத்திரமிரட்சிக்கும்அடுத்தமைந்தனேசத்துக்களையடைந்த புத்திரஞானியும் ஞானவானும் ஈசனும்-ஈஸ்வரனும்அறிவினுற்பிறிவில்லை ஞானத்தினுலேவேறுபாடில்லை கெடுத்த பிரமசத்திசெய்தமாயையின் குணங்களால்மாயையின்றன்மைகளால் மேலென்றும்-எறுமென்றும் தாழ்வென்றும் உயர்வென்றும்பிரிவாம்-வேறாகும்-எ-று.

இ-ம். ஏரிநீருரையுங்கடநீரில்லத்தையுங்காக்குமிடத்திற்சிறிது பெரிதென்னும் தொழிற்பேதமேயன்றிக் காசாகுந் தன்மையொன்றுறது போதகசனுக்கும் ஞானிக்கும் மாயைவித்தைகள்கற்றுரதம்மியமிருக்கினு மறிவின்றன்மையி லொப்பாவரென்பதாம். சக

அ-கை-இது.

நரரின்மன்னனைச்சித்தரைப்போலவேநாரணன்முதலான
சுரர்கண்மாயைவல் லவரணிமாதிக ளொக்கமாதமிக்கோர்
தரணிமானுடர்க்கவைக ளில்லாமையாற்றாழ்வுளரானும்
பிரமபாவனையா லிவரவரெனும்பேதமொன்றிலைபாராய்.

இ-ள். நரரில்-மானிடரில்மன்னனை அரசனைப்போலவும் சித்தரைப்போல சித்தர்களைப்போலவும் நாரணன்முதலான-திருமால்முதலியசுரர்கள்தேவர்கள்-மாயைவல்லவர்-மாயையில்வல்லமை யுடையவர்களாதலால்அணிமாதிகளொக்கஅணிமாமுதலிய வட்டசித்திகணிறைக்க மாதவமிக்கோர்மாதவத்தின்மிகுந்தவர்களாவர் தரணிமானிடர்க்கு பூமியிலுள்ள மனிதர்களுக்கு அவைகளில்லாமையால் அவைகளில்லாமையால் தாழ்வுளராறும் தாழ்வுடையவர்களானலும்பிரமபாவனையால் பரமதிருஷ்டியினல்இவர் இவர்கள்மானிடரெனவும் அவர்அவர்கள்தேவர்களெனவும் பேதமொன்றிலை பாராய்-வேறுபாடொன்றிலரெனக்காண்பாய்-எ-று.

இ-ம். மானிடரிற் சித்தருக்குள்ள மகிமைகண் மற்றவர்களுக்கின்றுயினும் மானிடத்தன்மையிலொப்பாவதுபோலச் சித்தருவமான திரிமூர்த்திகளுஞ் சிவன்முத்தர்களுந் தேவத்தன்மைமானிடத்தன்மைகளால்வேற்றுமையுள்ளோராயினுஞ் சித்துத்தன்மையி லொப்பாவாரென்பதாம். சஉ

அ-கை, அணிமாதிக ளீசன்தாயினரு னுக்கெங்ஙனமுண்டாயிற்றெனி லவரைநோக்கி யுபாசனைசெய்ததினு லாமெனக்கூறல்.

முத்திநல்கிய சற்குருவேபல முனிகளுக்கணிமாதி
சித்தபூமியில்கண்டிருக்கவு மந்தச்செல்வமீசனதென்றீர்
புத்தியொத்திடவுரைத்தருளென்றிடிற்புகழுமீசனைவேண்டிப்
பத்திசெய்திடும்தவத்தினுல்யோகத்தாற்பலித்ததென்றறிவாயே

இ-ள். முத்திநல்கியவ்வீடருளிச்செய்தசற்குருவேஞானதேசிகரே பலமுனிவர்களுக்கு அனந்தமிருடிகளுக்குஅணிமாதிசித்தி அணிமாமுதலிய வஷ்டசித்திகளுண்டாயிருப்பதை பூமியிற்கண்டிருக்கவும்இவ்வுலகத்திற்காத்திருக்கவும்அந்தச்செல்வம்அச்செல்வமானதுஈசனதென்றீர்ஈஸ்வரனதென்றுசொன்னீர்புத்தியொத்திடஅ

றிவிலொவ்வும்படிக்குஉரைத்தருள்சொல்லவேண்டுமென்றிடில் என்று கேட்பாயாகின் புகழுமீசனை வேண்டி துதியாநின்ற வீஸ்வரனை விரும்பி பத்திசெய்திடுந்தவத்தினல் பத்திசெய்திடுந் தவத்தினுலும்பலித்ததென அறிவாய்கிடைத்ததென்றறிந்துகொள்வாய்-எ-று. சஉ

இ-ம்-வெளிப்படை

அ-கை. முன்புள்ளஞானிகளைப்போல இவர்களுக்கணிமாதிகளேனில்லையென விஞவுதல்.

சிவசொரூபமானதேசிகமூர்த்தியே சித்திமுத்திகளிரண்டுந்
தவமுடையோரடைகுவரெனிலிவர்கள்போற்சகலருமடைவா
வவர்கள்பூருவஞ்சித்தியுஞானமுமடைந்ததுங்கண்டோமே[ரோ
யிவர்கண்ஞானிகளென்றிடிற் சித்திகளிவர்க்கிலாவகையேதோ.

இ-ள். சிவசொரூபமாம்-சிவாகாரமாகியதேசிகமூர்த்தியேகுருமூர்த்தியே சித்திமுத்திகள் அணிமாதிசித்தியு மோட்சமுமாகிய இரண்டும்உபயத்தையும்தவமுளோர்தவத்தையுடையவர்கள் அடைகுவரெனில் அடைவார்களென்றால் அவர்கள்போல் அத்தவத்தரைப்போல்சகலருமடைவாரோ அனைவருமடைவார்களா அவர்கள் அத்தவமுடையவர்கள் பூருவம்முன்புள்ளசித்தியும் அணிமாதி சித்தியும்ஞானமும்முத்தியும் அடைந்ததும்கண்டோம்பெற்றதுமாகப் பிரமாணத்தாற் பார்த்தோம் இவர்கள் ஞானிகளென்றிடில் இவர்களை ஞானவான்களென்றுசொன்னல் சித்திகள்-அணிமாதிசித்திகள் இவர்க்கிலாவகையேது இவர்களுக்கில்லாதவிதமியாதினல்-எ-று. சச

இ-ம். வெளிப்படை

அ-கை. அவ்விஞவிற்குத்தரம்

காமியத்தவங்காமியமொன்றையுங்கருதிடாத்தவமென்றும்
பூமியிற்றவருமிருவகைசித்தியும்போதமுந்தருமைந்தா
வாமிவற்றிலொன்றியற்றிஞலொன்றையேயடைகுவரிதுதீர்வை
யாமுரைத்தவவ்விரண்டையுமியற்றிஞரன்றுளபெரியோரே.

இ-ள். காமியத்வம்-காமியத்வமெனவும் காமியமொன்றையுங்கருதிடாதவமென்றும் நிஷ்காமியதபமெனவும்பூமியில்உலகத்தில்தவமிருவகைதவமிரண்டுவிதமாம்சித்தியும்காமியதபஞ் சித்தியும்போதம்நிஷ்காமியபதமுத்தியையும்தரும்கொடுக்கும்மைந்தாமாணக்காஆமிவற்றில்ஆகாநின்றவிவ்விரண்டில்லுன்றியற்றிஞர் ஒன்றைப்பியாசஞ்செய்தவர்கள் ஒன்றையேயடைகுவரவ்வொன்றினையேயடைகுவார்கள் இதுதீர்வைஇதுநிச்சயமாம்அன்றுளபெரியோர் அப்போதுள

ளாமகான்கள்யாமுரைத்தநாம்சொன்ன அவ்விரண்டையு மியற்றினு ர் அக்காமியத்தவர்நிஷ்காமியதவமென்னுமிரண்டிலுமுயர்ச்சிசெய் தார்கள்.

இ-ள்.முன்னுள்ள ஞானவான்களிற்சிலரிரண்டுதவத்தையுமனுச ந்தித்ததனுற் சித்திமுத்திகளிரண்டையும்பெற்றார்களென்பதாம்.()

அ-கை-இ-து.

அனகமைந்தனேமுத்திஞானத்தையேயடைந்தனமல்லாமற்
சனகன்மாபலிபகீரதன் முதலியனோர்சித்திகள்படித்தாரா
வினியசித்தியைவிரும்பினர் சிலர்சிலரிரண்டையுமுயன்றார்கண்
முனிவர்சித்திகள்விநோதமாத்திரந்தருமுத்தியைத்தாராவே.

இ-ள். அனகமைந்தனே களங்கமற்றவனே சனகன்சனகராச ன்மாபலி-மகாபலிச்சக்கிரவர்த்திபகீரதன்பகீரதராசன்முதலினோர் ஆதியானவர்கள் ஞானத்தை-ஞானத்தையப்பியாசித்துமுத்தி-மோ க்ஷத்தையடைந்தனரல்லாமல் பெற்றார்களேயன்றி சித்திகள்படித் தாரா அணிமாதிசித்தியையப்பியாசஞ்செய்தார்களாசிலர்சிலமுனிவ ர்கள்இனியசித்தியைவிரும்பினர் இனிமையானவணிமாதி சித்தியை மாத்திரம்விரும்பினோர்கள்சிலர்-சிலமுனிவர்கள் இரண்டையுமுயன் றார்கள் சித்திமுத்திகளிரண்டையு மப்பியாசித்தார்கள் முனிவர்சித் திகள்முனிவ ரப்பியாசித்தவணிமாதிசித்திகளானவைவிநோதமாத் திரந்தரும் காலம்போக்கு விளையாடலைமாத்திரங்கொடுக்கும் முத்தி யைத்தரா மோட்சத்தைக்கொடுக்கமாட்டாது-எ-று.

இ-ம்.யோகத்திலணிமாதிகளைப்பெற்றுமவைகளாற்பயன்படா மற்பின்னர்ஞானப்பேற்றினுன் முதியைப்பெற்றார்களாதலால்சித்தி களைஞானிகள் விரும்பவில்லையென்பதாம்.

அ-கை. சித்திகளிற்பயனின்றென்பது தெரிந்துஞ் சிலஞானிக ளேன் அதைவிரும்புகிறார்களென விஞதலுக்குத்தாரம்.

யோகஞானமேமுத்தியைத்தருமெனினொழிதந்தசித்திகள்வே
மோகமாயுள்ளவருந்தினார்சிலசிலமுத்தர்களேனென்றார்[ண்டி
போகமாய்வரும்பிராரத்வகன்மங்கள் புசித்தன்றுநசித்தேகு
மாகையாலந்தச்சித்திகள்பிராரத்வ மாகுமென்றறிவாயே.

இ-ள்.யோகஞானமேஐக்கியமானவத்துவிதஞானமேமுத்தியை த்தருமெனின் மோட்சத்தைக்கொடுக்குமாயின் ஒழிந்தசித்திகள்அ துநீங்கியவணிமாதிசித்திகளைவேண்டிவிரும்பி-வேகமாய் ஆசையுற்று சிலசிலமுத்தர்கள் சிலசீவன்முத்தர்கள் உடல்வருந்தினுற்றேகம்வரு த்தமுற்றார்கள்ஏனென்றால் அவ்வாறுவருந்தியதியாதினுலென்னில் போகமாய்வரும்அநுபோகமாய்வருகின்றபிராரத்வகன்மங்கள்பிரா

ரத்வகன்மங்களானவைபுசித்தன்றேபுசித்தல்லவாநசித்தேகும்கெட்டுப்போம்ஆகையால்ஆதலால் அந்தச்சித்திகள் அவர்கள்பெற்றவணிமா திசித்திகள்பிராரத்வமாகுமென்று இச்சாபிராரத்வமாகுமென்று அறிவாய் அறிந்துகொள்வாய்-எ-று.

இ-ம். சித்தியைவிரும்புவது பிராரத்வகன்மமென்பதாம் சஎ

அ-கை. ஐக்தெளிவித்தவாசியையன்பின்வியந்துதுதித்தல்.

இலக்கமாயிரஞ்சுருதியாலூகத்தாறென்மனமசையாமற்
பிலக்கவேண்டுமென்றருட்குருவே யகப்பிரகந்திபோதெளிவா
றுலக்கமானகண்ணுடியையடிக்கடிதுலக்கிறைற்பழுதன்றே[னே
யலக்கண்மாறியதேவரீரெனக்குறையமுதங்கடெவிட்டாவே.

இ-ள். இலக்கமாயிரஞ்சுருதியால்-அளவற்றவேதங்களினுலும் ஊகத்தால்யுத்தியினுலும்என்மனம்என்மனமானது அசையாமற்பிரிக்கவேண்டுமென்று சலனமின்றிஸ்திரமாயிருக்கவேண்டுமென்று அருட்குருவே அனுக்கிரகஞ்செய்யுந்தேசிகரே அகப்பிராந்திபோய்மனதின்கணுள்ளமயக்கம்நீங்கிதெளிவானேன்தெளிவையடைந்தேன் துலக்கமானகண்ணுடியைவிளக்கமானகண்ணுடியைஅடிக்கடிதுலக்கிறைல்திரும்பத்திரும்பவிளக்கிறைல் பழுதன்றே-குற்றமல்லவேஅலக்கண்மாற்றியபவத்துன்பநீக்கிய தேவரீர்சுவாமிகள் எனக்குரை அடியேனுக்கருளிய அமுதங்கள் உபதேசமுதங்கள் தெவிட்டாபுசிக்கப்புசிக்கத் தெவிட்டாவாம் எ-று.

இ-ம். வெளிப்படை.

அ-கை. பிர்மசிருட்டியான சிவேஸ்வரசகத்விவகாரர்களநிஞனதுபிராரத்வவென்றறிந்த சீடனதற்குவித்தாகவுற்பத்திசிருஷ்டியிறைலமைத்துகிடக்கின்ற சஞ்சிதத்தைக்கெடுக்கும் பொருட்டஃதுநசிக்குமென்றவிரண்டுவகையில்யாதுண்மையெனவினுதல்.

கைதவங்களைச்சாத்திரஞ்சொல்லுமோ கருணையாலெனையாளு
மையனேகுருவேயெவராகிலுமனுபவித்தாலன்றிச்
செய்தகன்மங்கள்விடாதென்றவசனமுஞ்சென்மகஞ்சிதம்வேவ
துய்யஞானத்தீச்சுடுமென்றவசனமுந்துணிவதெப்படிநானே(த்

இ-ள்.கைதவங்களை அகத்தியங்களைசாத்திரஞ்சொல்லுமோநூல்களுரைக்குமோகருணையால் கிருபையினுல்எனையாளும் அடியேனையாளாநின்றஐயனேகுருவேஎன்னுண்டவனுகியவாசாரியரேஎவராகிலும்யாவராகிலும்செய்தகன்மங்கள் செய்தசெநநபீசமாகியசஞ்சிதவினைகளையனுபவித்தாலன்றிபுசித்தாலல்லவிடாதென்ற வசனமும் நீங்காதென்றவாக்கியமுமேவஅக்துருரும்படிதுய்யஞானத்திபரிட

சுத்தமான ஞானாக்கினியானது சுடுமென்றவசனமும் - எரிக்குமென்றவாக்கியமுமாகிய விரண்டையும்நான் அறியேன் துணிவதெப்படி தெளிவதெவ்விதம்-எ-று.

இ-ம் சஞ்சிதகன்மமனுபவித்தாற்றீரும் ஞானத்தாற் றீருமென்றவசனத்தில் யாதுறுதியென வினவினதாம். ௪௯

அ-கை அவ்வினாவிற்குத்தரம்

சீவபேதங்களளவிலைமைந்தனே செய்கையுமளவில்லை
யாவவாமவரவரதிகாரங்களறிந்து பக்குவநோக்கிப்
பூவலர்ந்துபின்பலன்கள்காட்டுவன்போற் பூருவஞ்சித்தாந்தங்
காவல்வேதங்களிரண்டையும்வசனிக்குங்காண்டமூவகையாலே

இ-ள். மைந்தனே மாணாக்கனே சீவபேதங்கள் -சீவர்களுடையவேறுபாடுகள் அளவிலைமட்டில்லை செய்கையுமளவில்லை அவர்செயலுமட்டில்லை ஆவவாம்-அவரவர்களுக்காவன வாகுமாதலால்அவரவரதிகாரங்களறிந்து-அவரவர்களினதிகாரந்தெரிந்து பக்குவநோக்கி பருவம்பார்த்து பூமலரானது அலர்ந்து-விகசித்துபின்-பின்புபலங்கள் காட்டுவனபோல்-பயனைக் கொடுப்பதுபோல் காவல்வேதங்கள் - நம்மைக்காக்கின்றசுருதிகள்காண்ட மூவகையால்-கர்மகாண்டம்பத்திகாண்டம்ஞானகாண்டமென்னுமூன்றுபகுப்பினால் பூருவம்-பூருவபட்சவாக்கியமும் சித்தாந்தவாக்கியமுமாகிய இரண்டையும்வசனிக்கும் இரண்டுவகையையுஞ் சொல்லும்-எ-று.

இ-ள்.சீடனது பக்குவத்திற்கேற்கப் பூருவபக்ஷஞ் சித்தாந்தமெனவிரண்டாக வேதங்கூறுமென்பதாம். ௫௰

அ-கை-இ-து.

ஊனபாவிகளடைவானநரக ளவசியமானாலுந்
தானமந்திரவிரதவோமங்களாற் றவிருமென்பதுபொய்யோ
வீனமாம்பலசன்மசஞ்சித வினையெத்தனையானாலு
ஞானமாங்கனல்சுடுமென்றமறைமொழிநம்பினால்வீடுண்டே.

இ-ள்.ஊனபாவிகள்-கொடிதானபாவிகள் அடைவனநரகங்கள் நரகங்களையடைவது அவசியமானாலும்-உண்மையானாலும் தானம்-தானங்களினாலும்மந்திரம்- மந்திரங்களினாலும்விரதம்- நோன்புகளினாலும்ஓமங்களால்-யாகங்களினாலும்தேவிருமென்பது-ஒழியுமென்பதுபொய்யோ-அசத்தியமானமாம்-இழிவாகியபலசன்மம்-அனந்தசனனத்தைக்கொடுக்கும்சஞ்சிதவினை-சஞ்சிதகன்மம் எத்தனையானாலும்-எவ்வளவுசேர்ந்திருக்கினும்ஞானமாங்கனல்-ஞானாக்கினியானதுசுடுமென்ற-எரிக்குமென்ற மறைமொழி-வேதவாக்கியத்தைநம்பினால்-நம்புவாயானால் வீடுண்டு-முத்தியுண்டாம்-எ-று. ௫௧

அ-கை. சஞ்சிதக்கதைக் கெடுக்குஞானமிருக்கக் கன்மத்தைவிரும்புவதென்னென விறுதல்.

என்மனக்திருக்கோயிலாத்தினங்குடியிருந்தருள்மூர்த்தி
சென்மசஞ்சிதவினையைவேரறுத்திடு தேவரீர்மெய்ஞ்ஞானக்
தன்மயந்தருமகிமையைவிபுதர் சகத்துளோரறியாமற்
கன்மமாங்குழியினில்விழுந்தழிகின்றகாரணமுரையீரே.

இ-ள் என்மனம்-அடியேனிதயாம்பரமே திருக்கோயில்-சிறந்த கோயிலாக தினம்-எப்போதும்குடியிருந்தருள் குடிகொண்டிராநின்றகுருமூர்த்தி-தேசிகமூர்த்தியேசென்மசஞ்சிதவினையைபலவிருட்சமானசஞ்சிதகன்மத்தை வேரறுத்திடும்-மூலத்தோடுகெடுக்கின்றதேவரீர்மெய்ஞ்ஞானம் சுவாமிகளபோக்குமுண்மைஞானமானது தன்மயந்தரும்தனதுஸ்வரூபத்தைகொடுக்கும்மகிமையைபெருமையைவிபுதர் வானவரும்சகத்துளோர்உலகத்தாரும்அறியாமல்தெரியாமல்கன்மமாம்கிரியையாகியகுழியினில்படுகுழியில்விழுந்தழுகின்றவிழுந்துகெடுக்கின்றகாரணமுரையீர்-காரணத்தைச்சொல்வீர்-எ-று.

இ-ம். வெளிப்படை.

அ-கை இ-து அவ்விறுவிற்குத்தரம்

அழிவிலாதசற்பதந்தனைமைந்தனே யகமுகத்தவர்சேர்வார்
வழிநடப்பவர்பராமுகமானன் மலர்ந்தகண்ணிருந்தாலுங்
குழியில்வீழ்வர்கணப்படிவெளிமுகங் கொண்டுகாமிகளானோர்
பழிதரும்பிறவிக்கடலிலுழலுவார் பரகதியடையாரே.

இ-ள். அழிவிலாத-கெடாத தற்பதந்தனை-பிரமபதத்தை மைந்தனே புத்திரா அகமுகத்தவர்சேர்வார்-அந்தர்முகத்தையுடையவர்களடைவார்கள்வழிநடப்பவர்மார்க்கத்தில்செல்பவர்கள்பராமுகமானனேல்பராமுகமாய்நடந்தால் மலர்ந்தகண்ணிருந்தாலும்விச்சிதமாகினேத்திரமிருக்கினும்குழியில்வீழ்வர்காண்பள்ளத்தில்விழுவார்கள்அப்படி-அவ்வண்ணம்வெளிமுகக்கொண்டு-பகிர்முகத்தினால்காமிகளானோர் இச்சையுடையவர்கள்பழிதரும்-பழியைக்கொடுக்கின்றபிறவிக்கடலிலுழலுவார்-பலசமுத்திரத்திற் சுழலுவார்கள் பரகதி-முத்தியை அடையார்-பெறமாட்டார்கள்-எ-று.

இ-ம்.அகமுகமின்றிப் பகிர்முகமாகச் செல்லுதலே கன்மங்களிற்செல்லுதற்கேதுவென்பதாம். ௫௩

அ-கை சிவச்செயலிவைசிவச்செயலிவையெனத் தெளியனித்தஞ்சீவன் பகிர்முகமாதலின் ஈசன்செய்விக்குஞ் செயலேயன்றிச் சீவர்களென்செய்வார்களென்ற விறுவிற்குத்தரம்.

சிறந்தநன்மையுந் தீமையுமீசனார் செய்விக்குஞ்செயலன்றே [தோ
பிறந்தசீவர்களென்செய்வாரவர்கள்மேற் பிழைசொல்லும்வகையே
துறந்ததேசிகமூர்த்தியேயென்றிடிற்சுருதிநூற்பொருண்மார்க்க
மறந்தமூடர்கள்வசனிக்கும்பிராந்திகாண மைந்தனேயதுகேளாய்.

இ-ள். சிறந்தநன்மையும் சிறப்பானநன்றும்தீமையும்தீங்கும் ஈசனைவர் செய்விக்குஞ்செயலன்றேசெய்விக்குஞ்செய்கையல்லவா பிறந்தசீவர்கள் சனித்தசீவர்கள் என்செய்வார்-என்னசெய்வார்கள் அவர்கள்மேல்அச்சீவர்கள்மேல்பிழைசொல்லுங்குற்றஞ் சொல்கின்றவகையேதோ-வகையென்னதுறந்ததேசிகமூர்த்தியேயென்றிடில்சகபற்றுக்களையும்விடுத்தவாசிரியரேயென்றுகேட்பாயாகில்சுருதிநூற்பொருண்மாகம்-வேதசாஸ்திரார்த்தவழியைமறந்த மூடர்கள்க்ர்சமந்தவஞ் ஞானிகள்வக்கும்பிராந்திகாண்சொல் கின்றமயக்கமாம்மைமைந்தனே புத்திரனே அது கேளாய்-அதைகேட்பாய்-எ-று

அ-கை-இ-து.

திகழ்ந்தயீசனார் சிருட்டியுஞ்சிவனார்சிருட்டியும்வெவ்வேறெ
சகந்தனிற்பொதுவீசனார் சிருட்டிகள் சராசரப்பொருளெல்லா
மகந்தையாமபிமானங்கள்கோபங்களாசைகளிவையெல்லா
நிகழ்ந்தசிவனார் சிருட்டிகளாகுங்கா ணிமலனார்செயலன்றே.

இ-ள். திகழ்ந்தவீசனார்சிருட்டியும்விளங்கியவீஸ்வரசிருட்டியும்சிவனார்சிருட்டியும்-சீவசிருட்டியும்வெவ்வேறுவேறுவேறாய்சகந்தனில்உலகத்தில் பொது பொதுவாகிய சராசரம் பொருளெல்லாம்சராசரப்பிரபஞ்சங்களனைத்தும் ஈசனார்சிருட்டிகள் ஈஸ்வரசிருட்டிகளாய் அகந்தையாம் அகந்தையாகிய அபிமானங்கள் அபிமானங்களும் கோபங்களும் துவேஷங்களும் ஆசைகள் இராகங்களுமாகிய இவையெல்லாம் இவைகளனைத்தும் நிகழ்ந்த விளங்கிய சிவனார் சிருட்டிகளாகுங்காண்-சிவசிருட்டிகளாம் நிமலனார்செயலென்று நின்மலமான வீஸ்வரசிருட்டிகளல்ல-எ-று.

இ-ம். ஈஸ்வரசிருட்டி சீவசிருட்டிகளிவையெனப்பகுத்துக்கூறினதாம்.

அ-கை-இ-து.

மூவராம்பரன்சிருட்டிகளுயிர்க்கெலாமுத்திசாதனமாகும்
சீவனாரதுசிருட்டிகடங்களைச் செனிப்பிக்கும்பிணியாகுஞ்
சர்வராகிகண்சித்திடிலொருவர்க்குஞ் சனனங்கணசியாவாங்
கெர்வமாதிகண்சித்திடிற்பந்தமாங்கொடும்பிறவிகள்போமே.

இ-ள்.மூலவராம்பரதன்சிருட்டிகள்மும்மூர்த்திகளானவீஸ்வர சிருட்டிகளானவை உயிர்க்கெல்லாம் சீவர்களவர்க்கும் முத்திவீடடைவதற்குச்சாதனமாகும்-சாதனமாம்சிலஞராது சிருட்டிகள்சீவசிருட்டிகளானவைதங்களைச்செனிப்பிக்கும்பிணியாகும்சீவர்களைப்பிறப்பிக்கின்ற சஞ்சிதரோகமாம் தாவராதிகனசித்திடில் ஈஸ்வரசிருட்டியாகிய தருமமுதலியபஞ்சபூதபௌதிகவடிவங்கணசிக்கின் ஒருவர்க்கும் ஒருவர்க்காவது சனனங்கணசியாவாம் பவங்க ணீங்காவாம் கோபமாதிகனசித்திடில்-சீவசிருட்டியான துவேஷமுதலிய விகற்பமிறக்கின்றபந்தமானகொடும்பிறவிகள்-கொடியசனனங்கள் போம் நசிக்கும்-எ-று.

இ-ம்.ஈஸ்வரசிருட்டியானபஞ்சபூத பௌதிகமுதலிய தத்துவங்கண்முத்திக்குச் சாதனமுஞ்சீவசிருட்டியானகாமக்குரோதாதிகள்பவத்திற்கேதுவுவாமென்பதற்பகுத்துக்கூறினதாம். ௫௯

அ-கை-இ-து.

ஈசர்காரியம்பிரயயத்தொழியவுமெவர்பலமொழிந்தார்க
டேசகாலதேகாதிகளிருக்கவுஞ் சீவகாரியமோக
நாசமாகியவ்வேகத்தினுயிரொடு ஞானமுத்தர்களானர்
பாசமோகங்கள், பசுக்களின்செயலின்றிப்பசுபதிசெயலன்றே.

இ-ள்.ஈசர்காரியம் ஈஸ்வரசிருட்டியானபஞ்சபூதபௌதிகங்கள்பிரளயத்தொழியவும் கற்பத்திற்கெடவும் எவர்பலமொழிந்தார்கள்-யாவர்பிறவியையொழிந்தவர்கள்தேசகாலதேகாதிகள்தேயமுங்காலமும்தேகமுமுதலிய வீஸ்வரசிருட்டிகள் இருக்கவும்இருக்கும்போதேசீவகாரியமோகம்சீவசிருட்டியானகாமமுதலியவைகள் நாசமாகி நசித்துஅவ்விவேகத்தின்அவ்விவேகத்தினல் உயிரொடுஞானமுத்தர்களானர் சீவன்முத்தர்களானர்களாதலால் பாசமோகங்கள்-காமம்வெகுளிமயக்கங்கள்பசுக்களின்செயலன்றிசுவச்செயலன்றிபசுபதிசெயலன்று ஈஸ்வரன்செயலல்ல-எ-று.

இ-ம்.ஈஸ்வரசிட்ருடியிருக்கச்சீவசிருட்டிநசிக்கினபோதேவீடடைதலாற்காமமாதிகள்சிவச்செயலேயன்றிச்சிவச்செயலன்றென்ப

அ-கை-இ-து

அச்சுவத்தமென்றொருமரமதிலிரண்டரும்பறவைகள்வாழு
நச்சுங்கொருபறவையாம்மரக்கனிநன்றெனத்தின்னு
மெச்சுமங்கொருபறவைதின்னு வியங்கிப்பொருளாக
வைச்சுமாமதைசிவனை வீசனை வகுத்தவாறறியாயே.

இ-ள். அச்சுவத்தமென்றொருமரம்அரசென்றபேருள்ளவொருவிருட்சம்அதில்-அத்தருவில்இரண்டரியும்பறவைகள் இரண்டரியபட்சிகள்வாழும்தாழ்ந்துகொண்டிருக்கும்அங்கு-அவ்விடத்துநச்சும்விரும்புகின்றஒருபறவை-ஒருபட்சியானது அம்மரக்கனி-அத்தருவின்பலத்தைநன்றுநன்றெனத்தின்னும் நல்லதுநல்லதென்றுபுசிக்கும்அக்கும்அதன்கண்மெச்சும்மெச்சப்பட்டஒருபறவை-ஒருபட்சியானதுதின்னுமெதனபுசியாதென்றுவிபக்ஷிப்பொருளாகவைச்சு-குறிப்புப்பொருளாகவைத்து சிவனைசிவனையும்ஈசன்-ஈசனையும்வகுத்தவாறுபகுத்தவண்ணம் அறிவாய்தெரிவாய்-எ-று.

அச்சுவத்தமென்பது-தலைகீழானமாயவிருட்சமெனக்கொள்க

இ-ம்.மாயையில்வாழ்கின்றசீவேஸ்வரர்களிற்றுரமிருதெனப்புகுத்துக்கூறினதாம். ௫௮

அ-கை இ-து.

இந்தச்சிவனால்வருமறுபகையெலா மிவன்செயலெல்லாம
லந்தத்தேவனால்வருமென்றமூடர்க ளதோகதியடைவார்க
ளிந்தச்சிவனால்வருமறுபகையெலா மிவன்செயலல்லாம
லந்தத்தேவனாலன்றெனும்வேகியே யமலவீடடைவாரே

இ-ள்.இந்தச்சிவனால் இச்சிவனால்வரும்-உண்டான அறுபகையெலாம்காமமுதலியபகைகளாறும் இவன்செயலல்லாமல்- இவன்சிருட்டியேயன்றிஅந்தத்தேவனால்- அவ்வீசனால்வருமென்ற-உண்டாமென்றமூடர்கள்-அறிவினர்கள் அதோகதியடையார்கள்-நரகத்தையடைவார்கள் இந்தச்சிவனால்-இச்சிவனால்வரும்உண்டாகும் அறுபகையெலாம்-சட்பகைகண்முதலியவனைத்தும்இவன்செயலல்லாமல் இச்சிவசிருட்டியேயன்றி அந்தத்தேவனால் அன்றெனும்வந்ததென்றென்னும்விவேகியேவிவேகிகளே அமலவீடடைவார்-நின்மலமானமோட்சத்தையடைவார்கள்-எ-று.

இ-ம்.காமமாதிகளைஈஸ்வரசிருட்டியெனக்கருதாமற் சிவசிருட்டியெனக்கொண்டவற்றை விசாரத்தாற்கெடுக்கின் முத்தியுண்டாமென்பதாம்.

அ-கை முன்ஈஸ்வரசிருட்டிபொதுவென்றமையால்வரும்பொதுவாகவேண்டுமே யங்ஙனமாயிற்சீவர்களிடத்திற் பட்சபாதம்வருவானேனென்றவினாவிற்குத்தரம்,

நலமெய்யனேயெல்லவர்க்குந்தெய்வநாயகன்பொதுவானாற்
சிலரைவாழ்வித்துஞ்சிலரொடுகோபித்துஞ் செய்வதேனென்றுமேயேற்
குலவுமைந்தரைத்தந்தைபோற்சிற் சிட்டரைக்குளிர்ந்துதுட்டரைக்
கலைகணல்வழிவரச்செயுந்தண்டமுங்கருணையென்றறிவாயே.

இ-ள். நலமெய்யனே உண்மையானநல்லவாசிரியரே எல்லவர்க்கும்-அனைவர்க்கும் தெய்வநாயகன்-ஈஸ்வரன்பொதுவானால்-பொதுமையானால்சிலரைவாழ்வித்தும்- சிலரைவாழ்வுறசிலரொடுகோபித்தும்சிலரைத்துன்புறவும் செய்வதேனென்றுமேயேல்-செய்வதென்னவென்றுகேட்டாயாகின் குலவுமைந்தரை -குலவாநின்றபுத்திரர்களை தந்தைபோல்பிதாவைப்போல்சிட்டரைக்குளிர்ந்து- சற்சனருக்கின்பஞ்செய்துதுட்டரைக்காய்வன-துற்சனருக்குத்துன்பம்செய்வன கலைகள் சாஸ்திரங்கள்சொல்லும் நல்வழிவர-சன்மார்க்கத்தையடைய செய்யுந்தண்டமும்யிவர்களைச்செய்யுஞ்சிட்சையும் கருணையென்றறிவாய் கிருபையென்றுணர்வாய்-எ-று.

இ-ம் சீவர்களைசுகப்படும் பொருட்டு வருந்தினத்தும்கருணையேயன்றிப்பட்சபாதமென்றென்பதாம். ௬௰

அ-கை அங்ஙனமாயினீசன்யாவரையுமேனிரட்சிக்கவில்லையெனவருஞ் சங்கைக்குத்தரம்.

மனைவிலங்கருமைந்தனே கற்பக மரங்கனல்புனன்மூன்றுந்
தனையடைந்தவர்வறுமையுஞ் சிதமுந்தவிர்த்தாளு                [யா
மனையவீசனுமடைந்தவர்கருள் செய்வாரான்கவர்க்கருள்செ
ரினையகுற்றங்களெவர்குற்றமாகு மென்றெண்ணிநீயறிவாயே.

இ-ள்.மனைவிலங்கறும்-சம்சாரநிகளநீக்கியமைந்தனே-புத்திரா கற்பகமரம்-கற்பகவிருட்சமும்கனல்அக்கினியும்புனல்சலமும்மூன்று இவைமூன்றும்தனையடைந்தவர்-தம்மைச்சேர்ந்தவரதுவறுமையும்தரித்திரத்தையும்சிரமும்குளிரையும்தாகமும்- தாகத்தையும்தவிர்த்தாளும்நீக்கிஇரட்சிக்கும் அனைய அத்தன்மையனவாகிய ஈசனும் ஈஸ்வரனும்அடைந்தவர்க்குதம்மையடைந்தவர்க்குஅருள்செய்வார் கிருபைசெய்வார் அகன்றவர்க்கு-அடையாதவர்களுக்கு அருள் செய்யார்கிருபைசெய்யார் இனையகுற்றங்கள்- இத்தன்மையானகுற்றங்கள்எவர்குற்றமாகுமென-யாவர்குற்றமாமென்றுஎண்ணி ஆலோசித்துநீயறிவாய்நீதெரிந்துகொள்வாய்-எ-று

இ-ம் கற்பகவிருட்சமுதலியவற்றைச் சார்ந்தவர்க்குத்துன்பநீக்கிஇன்பமுண்டாவதுபோலவீசனைச்சார்ந்தவர்களுக்குப்பவத்துன்பநீங்கிவிட்டின்பமுண்டாவதுண்மையெனவறிந்தவனைச் சாரமுயற்சிசெய்யாதசிவன் குற்றமேயென வறிகவென்பதாம். ௬௧

அ-கை ஞானமுண்டாகச்சீவன்முயற்சிக்குமாறுகூறல்.

ஒன்றுகேண்மகனேபுமான்முயற்சியாலுரைத்துமாணிடர்க்கீச
னன்றுசெய்யவேகாட்டியநூல்வழிநடந்துநல்லவர்பின்னே
சென்றுதுட்டவாதனைவிட்டுவிவேகியாச்செனித்தமாயையைத்
நின்றுஞானத்தையடைந்தவர்போநிச்சயமிதுதானே.[தள்ளி

இ-ள் மகனேபுத்திராஒன்றுகேள்ஒருவசனங்கேட்பாய்புமான் முயற்சியால்புருஷப்பிரயத்தினாலீசன்ஈஸ்வரன்மாணிடர்க்குமனிதர்க்குநன்றுசெய்யநன்மையைச்செய்யஉரைத்துசொல்லிகாட்டியகாண்பித்தநூல்வழிகடந்துசுருதிமார்க்கத்திற்போய்நல்லவர்பின்சென்றுசத்துக்கள்வாக்கியப்படியவர்பின்சென்றுதுட்டவாசனைவிட்டுஅசுத்தவாசனையைநீக்கிவிவேகியாய்சிற்சடங்களைப்பகுத்தறியும்விவேகத்தையுடையவனாய்செனித்தமாயையைத்தள்ளிகற்பனையாகவுதித்தசபமானமாயைநீக்கிநின்றுவிலட்சணமானகூடஸ்தனாயிருந்துஞானத்தைபிரமசைதன்னியத்தை அடைந்தவர்பெற்றவர்களுடையபவங்கள்போம்பிறவிகணீங்கும் இதுதான் இதுவேநிச்சயம்சத்தியமாம்-எ-று.

இ-ம்சீவன்றனதுமுயற்சியினாலீஸ்வரனுக்கிரகம்பெற்று அவர்வாக்கியமானவேதாந்தமுடிவைக் குருமுகமாக விசாரித்ததனால்விவேகமுண்டாயஞ்ஞானநீங்கி ஞானமுதயமாகிப்பவநீங்குமென்பதாம்.

அ-கை எதினாலிந்தஞானமுதிக்குமென்றவினாவிற்குத்தரம்.

இந்தஞானந்தான்வருவதெப்படியெனிலிடைவிடாவிசாரத்தால்
வந்தடைந்திடும்விசாரந்தானேதெனின் மனுதியாஞ்சரீரத்தா
லிந்தநானெனவனசித்ததுசடமெது விரண்டுமொன்றாக்கூடும்
பந்தமேதுவீடேதெனவுசாவுதல் விசாரமென்றறிவாயே.

இ-ள். இந்தஞானந்தான்-இப்பிரமஞானமானதுவருவதெப்படியெனில்-உதிப்பதெவ்வண்ணமென்று கேட்பாயாகில் இடைவிடா விசாரத்தால்-இடையறாவாத்மவிசாரணையால் வந்தடைந்திடும்வரும் விசாரந்தான்விசாரணையாவது ஏதெனில்யாதெனில்மனுதியாஞ் சரீரத்தில் மனமுதலிய தேகத்திலிருக்கின்ற இந்தநானெவன் இந்தநான்யாவன்சித்தெது சித்தென்பதியாதுசடமெதுசடமென்பதியாது இரண்டுமொன்றாய்க்கூடும்-சித்துசடமாகியவிரண்டுமொன்றாகக் கூடப்பெற்றபந்தமேது-பந்தயம்யாது வீடேது அதனை விடப்பெற்ற முத்தியாதென உசாவுதல்-விசாரித்தல் விசாரமென்றறிவாய்விசாரணையென்றறிந்து கொள்வாய்-எ-று.

இ-ம். சிற்சடவிலக்கணங்களைப் பகுத்தறியும் விசாரமே ஞான முதிப்பதற்கு மூலமென்பதாம்.

அ-ரை. கன்மமுக்கியமென்னுங்கொள்கைநீங்கும்பொருட்டுஞானமுதிப்பதற்குச்சத்தருமமிருக்கவிசாரமியாதுக்கென்றவினாவிற்குத்தரம்.

போனசன்மங்கடமிலனுஷ்டித்தா னற்புண்ணியபரிபாக
ஞானமாகுமேவிசாரமேனென்றிடி னுமுரைத்திடக்கேளா
யானபுண்ணியமீசுராப்பணஞ்செயி னசுசிபோஞ்சுசியாகு
மானதம்பினைவிசாரித்துஞானத்தை மருவுமென்றறியாயே.

இ-ள். போனசன்மங்கடமில்- முன்சனனங்களில்அனுஷ்டித்த அப்பியாசஞ்செய்தநற்புண்ணியபரிபாகம்சத்கருமபாகத்தால்ஞானமாகுமே ஞானமுதிக்குமே விசாரமேனென்றிடில்-விசாரணையாதுக்கென்றுபாகில்நாமுரைத்திடக்கேளாய்யாண்சொல்லுவதுங்கேட்பாய்ஆனபுண்ணியம்-அத்தன்மையானசற்கருமத்தைஈசுராப்பணஞ்செயின்-ஈஸ்வரப்பிரீதிசெய்யில்-அசுசிபோம்அசுத்தநீங்கும்சுசியாகும்-சித்தசுத்திவரும்மானதம்-மனதுபினை-பின்புவிசாரித்துசிற்சடவிசாரஞ்செய்து ஞானத்தைமருவுமென்று-சைதன்னியத்தையடையுமென்று - அறிவாய்தெரிவாய்-எ-று.

இ-ம். நிஷகாமமாகச்செய்யுஞ்சற்கருமஞ்சித்திசுத்தியையும்விசாரஞானத்தையுங் கொடுக்குமாதலால் விசாரமே வேண்டுமென்பதாம்.

அ-ரை பலபேற்றையுந் தரத்தக்கவலியுள்ள கன்மஞானத்தைத்தராதோ விசாரம் யாதுக்கென வினுதல்.

பத்தியும்வயிராக்கியமுப்பர லோகமுமணிமாதி
சித்தியுந்தவநிட்டையுமோகமுந் தியானமுஞ்சாரூப
முத்தியுந்தருப்விசித்திரகருமங்கண் மோகமாத்திரந்தள்ளும்
புத்தியுந்தரலருமையோவிசாரமேன் புண்ணியகுருமூர்த்தி.

இ-ள். பத்தியும் ஈஸ்வரபத்தியையும் வயிராக்கியமும்-நிராசையையும்பரலோகமும்சுவர்க்காதிலோகங்களையும்அணிமாதிசித்தியும்அணிமாமுதலியவஷ்டசித்திகளையும்தவநிஷ்டையும்-தவமுள்ளசமாதியையும்யோகமும்-இயமாதியஷ்டாங்கயோகங்களையும் தியானமும்-மூர்த்தியாகியதியானங்களையும்சாரூபமுத்தியையும்-தருமகொடுக்கின்றவிசித்திரகருமங்கள்பலசத்தியுள்ளகன்மங்களாணவைமோகமாத்திரந் தள்ளும்-அஞ்ஞானத்தைக்கொடுக்கின்றபுத்தியுந்தரல்-அறிவையுங்கொடுப்பது அருமையோ அரியலோ விசாரமே-விசாரணையாதுக்கு புண்ணியகுருமூர்த்திதருமஸ்வரூபமானவாசிரியரே.

இ-ம் வெளிப்படை.

அ-கை. அவ்வினாவிற்குத்தரங்கூறுவான்றொடங்கித்திட்டாந்தங்கூறல்.

வேடமாறியபேர்களையறியவே வேண்டினான்மகனேகேள்
கூடமாமவர்சுபாவங்கள்சீலங்கள் குறிகளாய்ந்தறியாம
லோடியுங்குதித்துந்தலைகீழ்நின்று முயர்ந்தகம்பத்தேறி
யாடியம்பலகன்மங்கள் செய்யினுமவருண்மைதெரியாதே.

இ-ள். வேடமாறியபேர்களை மாறுவேடங்கொண்டவர்களை அறிய வேண்டினால் அவர்யதார்த்தவடிவத்தை யறியவிரும்பினால் மகனேகேள்-மாணாக்கனேகேட்பாய் கூடமாம்-இரகசியமான அவர்சுபாவங்கள் அவர்களுடையகுணங்களையும் சீலங்கள் நடைகளையும்குறிகள் அடையாளங்களையும்ஆய்ந்தறியாமல்ஆராய்ந்தறியாமல் ஓடியும்-ஓடியுங்குதித்து-குதித்துந்-தலைகீழ்நின்றும் தலைகீழாகநின்றும் உயர்ந்தகம்பத்தேறி-உன்னதமான-ஸ்தம்பத்திலேறி ஆடியும்- ஆடியும்-பலகன்மங்கள்செய்யினும் இவ்வாறானபலகன்மங்கள் செய்தாலும்அவருண்மைதெரியாது-அவர்களது யதார்த்தவடிவந் தெரியமாட்டாது. கூசு

அ-கை. தார்ஷ்டாந்தங்கூறல்.

இன்னவாறந்தப்பிரமத்தையறிவிக்கு மிலக்கணத்தால்வேதஞ்
சொன்னஞானமும்விசாரத்தால்வருமன்றிசுருதிநூல்படித்தாலு
மன்னதானங்கடவங்கண்மந்திரங்களாசாரங்கள்யாகங்க
ளொன்றுசெய்யினுந்தன்னைத்தானறிகின்றதிவைகளால்வாராதே.

இ-ள். இன்னவாறு இத்தன்மையைப்போல பிரமத்தையறிவிக்கும்-பிரமஸ்வரூபத்தை தெரிவிக்கும் இலக்கணத்தால் லட்சணத்தால் வேதஞ்சொன்ன-சுருதிசொல்லிய ஞானமும் பிரமஞானமும்விசாரத்தால்-விசாரணையினால்வருமன்றி-வருமேயல்லாமல் - சுருதிநூல் வேதசாஸ்திரங்களை-படித்தாலும் வாசித்தாலும்- அன்னதானங்கள் அன்னதானங்களும் தவங்கள்-தவங்களும் மந்திரிகள்மந்திரிகளும்-ஆசாரங்கள்-ஆசாரங்களும் யாகங்கள் வேள்விகளுமாகிய வினைகளில் என்ன செய்யினும் எக்கருமங்களை செய்தாலும் தன்னைத்தானறிகின்றது ஆத்மாவாகிய தன்னைத்தெரிந்துகொள்வது இவைகளால்-இக்கன்மங்களால்-வாராது-வரமாட்டாது-எ-று.

இ-ள். க-ம் ஒருவனுண்மையைத்தெரிவிக்குஞ்சத்தியுணர்வுக்கே யன்றித் தொழிற்கின்மைபோல ஞானத்தையறிவிக்குஞ் சத்திவிசாரத்திற்கேயன்றிக் கன்மத்துக் கின்றென்பதாம். கூஎ

அ-கை. ஞானமுதிப்பதற்கு நீக்கவேண்டிய வஞ்ஞானக்கருமத் தாலன்றி விசாரத்தா லென்றுநீங்குமெனல்.

துலங்குதர்ப்பணமழுக்கறக்கைக்கொண்டு துலங்கிறற்போமன்
விளங்குபுத்தியாலுலகிலார்துலக்கினர் விமலதேசிகமூர்த்தி [றி
களங்கமாகுமஞ்ஞானமுமப்படி கருமத்தாற்கழுவாம
துளங்குறித்தஞானத்தினலெப்படி யொழியுமீதருள்வீரே.

இ-ள். துலங்குதர்ப்பணப்-விளங்காநின்றசெப்புக்கண்ணுடியினுள்ள, அழுக்கற-களங்கமற, கைக்கொண்டு-கரங்கொண்டு, துலங்கிறற்போமனறி விளக்கிறற்போமேயல்லாமல்-விளங்கும் புத்தியால்விளங்காநின்ற வறிவினல் உலகில்-சகத்தின்கண்-ஆர் துலக்கினர்எவர்விளக்கினர்கள் விமலதேசிகமூர்த்தி நின்மலமான-குருமூர்த்தியே-களங்கமாகும்-களங்கமாகிய-அஞ்ஞானமும்-அஞ்ஞானத்தையும் அப்படி அவ்வண்ணம்-கருமத்தால்-கன்மத்தினல்-கழுவாமல் சுத்திபண்ணுமல் உளங்குறித்த-மனதிற்-குறிக்கப்பட்ட-ஞானத்தினல் அறிவினல் எப்படி யொழியும்-எங்ஙனநீங்கும் ஈதருள்வீர்-இதைச்சொல்லுவீர் எ-று.

அ-கை. ஞானமுதிப்பதற் கஞ்ஞானத்தைநீக்குதல் விசாரத்தாலன்றிக் கன்மத்தாற்கூடாவெனல்.

தர்ப்பணத்திற் களிம்புவாஸ்தவமலஞ்சகசமாதலின்மைந்தா
கற்பளிங்கினிற் கருநிறஞ்சாசமர்க்கறுத்ததன்றுரோபங்
தர்ப்பணத்தினிலழுக்கறவேண்டிறற்சாதனத்தொழில்வேண்டுங்
கற்பளிங்கிலா ரோபமேகறுப்பெனக் கண்டிடமனம்போதும்.

இ-ள். தர்ப்பணத்தினில்-செம்புக்கண்ணுடியில்-களிம்பு களிம்பாகிய வாஸ்தவமலம்-உள்ளவழுக்கானது சகசமாதலின்-சுபாவமாதலால்-மைந்தா-மகனே-கற்பளிங்கினில்-படிகக்கல்லிற்றேற்றிய-கருநிறம்-கருமைநிறமானது சகசமாக்கறுத்ததன்று-சுபாவமாகக்கறுத்ததன்று ஆரோபம்-கற்பிதமாம்-தற்பணத்தினில்-செம்புக்கண்ணுடியில் அழுக்கறவேண்டிறல் களங்கமறும்படி விரும்பினல் சாதனத்தொழில்வேண்டும் கருவிகளாற்செய்யுஞ்செயல்வேண்டும்-கற்பளிங்கினில்-படிகக்கல்லிற்றேன்றிய-கறுப்பு-கருநிறம்- ஆரோபமேயெனக் கற்புதமேயென்று கண்டிட பார்த்திட மனம்போது மனமேபோதும்-எ-று. சுக

அ-கை அதற்குபாயங்கூறல்.

இங்குமப்படி சச்சிதானந்தத்தி லிடர்சடம்பொய்மூன்றுந்
தங்குமாயையின் கற்பிதமன்றியே சகஸவாஸ்தவமென்றே
பங்குமாகுமஞ் ஞானத்தைககருமங்கள் பகைசெயாதுறவாக்குந்
துங்கஞானமே கருமமஞ்ஞானத்தைச் சுடுகின்றநெருப்பாமே.

இ-ள். இங்கும்-அத்திர்ஷ்டார்தத்திலும் அப்படி அத்திர்ஷ்டார்த்தத்தைப்போல சச்சிதாநந்தத்தில் அஸ்திபாதிப்பிரியத்தில் இடாகடம் போய-அனுர்தசடதுக்கமாயெ மூன்றும்-மூன்றும்-தங்கும்-தங்காவின்ற-மாயையினகற்பிதமன்றியே மாயாகற்பிதமேயல்லாமல்சகவாஸ்தமன்று-சுபாவமாயுள்ளதென்று-பங்கமாகு மஞ்ஞானத்தை-பழூதானவஞ்ஞானத்தைகருமங்கள்-கன்மங்களானவை பகைசெய்து-பகைபண்ணாமல்-உறவாக்கும்-நட்பாக்கும்-துங்கஞானமே மேனாஞானமேகருமவஞ்ஞானத்தை கருமரூபமாகியவஞ்ஞானத்தை சுடுகின்ற நெருப்பாய்எரிகின்றவக்கினியாம்-எ-று.

இ-உ-க-ம். செம்பிற்களிம்புபோல் வாத்மாவுக்கஞ்ஞானஞ் சகசமாகாமற் பளிங்கிற் பஞ்சவர்ன்னம்போலப் பிராந்தியாதலாலங்ஙனந்தோற்றுங் கன்மசம்மந்தமான வஞ்ஞானத்தைக்கெடுப்பது விசாரரூபமான ஞானமேயாமென்பதாம். ௭௰

அ-கை. முற்கூறியதை வற்புறுத்தல்.

மனைக்குள் வைத்தபண்டங்களை மறந்தவன் வருடநூறழூதாலு
நினைத்துணர்ந்தபின் கிட்டுமெப்படியிந்த நிருமலவான்மாவு
மனர்த்தமான தன்மறதியைக்கெடுக்குந் தன்னறிவினாற்காணுமற்
கனத்தகன்மங்க ளூழுகஞ்செய்யிலுங்கா ணுமோ காணாதே.

இ-ள். மனைக்குள் வீட்டிற்குள்-வைத்தபண்டங்களை-வைத்தவஸ்துக்களை-மறந்தவன்-மறந்துவிட்டவன்-வருடநூறழூதாலும் நூராண்டிற்றினும் நினைத்து-முன்வைத்தவிடத்தை கியாபகஞ்செய்துஉணர்ந்தபின்கிட்டும்-அறிந்தபின்கிடைக்கும்-அப்படிஅதைப்போலஇந்தநிருமலவான்மாவும்இந்தநிருமலமானவாத்மஞானமும் அனர்த்தமானபிரயோசனமில்லாத தன்மறதியைக்கெடுக்கும் தனதறியாமையைப் போக்கும்-தன்னறிவினாற்காணுமல் தனதறிவினாறறிசிக்கப்படாமல்யுகஞ்செய்தாலும்-காணுமோகாணப்படுமோ-காணாது-காணப்படாது-எ-று.

இ-ள். ஞாபகத்தால்மறதிநீங்கின முன்வைத்தபொருள் வெளிப்படுமல்லது தொழிலால்வெளிப்படாததுபோல விசாரஞானத்தாலஞ்ஞானநீங்கி முன்னுள்ள பிரமப்பொருள் வெளிப்படுமல்லது கன்மத்தால வெளிப்படாதென்பதாம்.

அ-கை. பிரமசுகத்தை விசாரஞானங் கொடுக்குமெச்சுகத்தைக் கன்மமுங்கொடுக்குமென்ப தியாதென்னுதல்.

நன்மைபாக்குநவே சுகந்தருவது ஞாபமேயெனும்வே
தன்மபாவமிச்சிரங்களாற்றேவர்கடருவிதங்குகன்மாந்தர்
சென்மமாகுவசாதிபாசாரமே செய்தவன்சுகமென்று
கன்மகாண்டத்தில் விதிப்பதேன்விதித்துளகாரணமுரையீரே.

இ-ள். நன்மைபாக்குநவேநன்மைப யிவவாசிரியரேசுகந்தருவது பிரமாணத்தைக்கொடுப்பது- ஞாபமேயென்னும் அறிவேயென்கிற வேதம்-தருமபாவது தன்மம்-புண்ணியகன்மங்களால் தேவர்கள் தேவர்களும் பாவம் பாவகன்மங்களால் தருவிலங்குகள்விருட்சமூதன்மிருகமிருகிபவைத்தோற்றமும் மிச்சிரங்களால் மிஸ்ர கன்மங்களால் மாந்தர் மனிதர்களுமாகிய சென்மமாகுவ சென்மமாவனவென்றும் கருதிபாசாரமே-வன்னாச்சிரமதருமப்படி செய்தவஞ்சுகமென்றும்செய்கிறதவமே சுகமெனவும் கன்மகாண்டத்தில் கிரியா காண்டத்தில்விதிப்பதேன் விதித்தென்ன விதித்துள அங்ஙனம்விதியாநின்றகாரணமுரையீர்-காரணத்தைச்சொல்வீர்-எ-று.

இ-ப்-வெளிப்படை

அ-சை. அங்ஙனம்விதிந்தவேதத்தினபிப்பிராயம்வேறெனக்கூறல்

தினமுண்ணுநர்பிள்ளைநோய்க்கிரங்கிபேதிம்பட்டமெதிர்காட்டிக்
கன்மருந்துமொளித்துவைத்தழைக்கிணைபாந்தாய்போல
மனைபறங்கள்செய்மகங்கள்செய்நன்றன்று மலர்ந்தவாசகஞ்சொல்லு
நினைவேறுகாண்சுவர்க்ககாமிகளந்தவிர்ணயந்தெரியாரே.

இ-ள் தினமுண்ணுநர்நாடோறு மண்ணைப்புசிக்கின்றபிள்ளைநோய்க்கு குழந்தையின்வியாதிக்கு இரங்கி இரக்கமுற்றுதன்மருந்துகளொளித்துவைத்து கனமானஒளஷதங்களைமறைத்துவைத்துதீம்பண்டமெதிர்காட்டிதித்திப்புள்ளவஸ்துக்களை யெதிரேகாணபித்துஅழைக்கிற அக்குழந்தையைப்பக்கூப்பிடுகின்ற கருணை பாந்தாய்போலகிருபையுள்ளமாதாவைப்போலமனைபறங்கள்செய் இல்லறகருமங்களைச்செய் மகங்கள்செய் யாகங்களைச்செய நன்றென்று அஃது நன்மையென்றுமலர்ந்த வாசகம்-விகசிதமான வேதவாக்கியம் சொல்லு நினைவு வேறுகாண் சொல்லுகின்றகருத்துவேறாகும் சுவர்க்ககாமிகள்சுவர்க்கவிருப்பமுள்ளவர்கள் அந்தநிர்ணயந்தெரியார் அக்கருத்தின்நிர்ணயத்தையறியார்.

ப-ம். மண்ணுநர்பிள்ளையென்பதனால் விடயத்தைநுகருமறிவிலியென்பதும்நோயென்பதனாற்பிரவித்துன்பமென்பதும்இரங்கியென்பதனாலருளாற்றென்பதும் தீம்பண்டங்காட்டியென்பதனால் சுவர்க்காதி

பதங்களைக்காட்டுமென்பதும் மருந்துகளொளித்துவைத்தென்றதனுல்ஞானாமுதத்தை யொளித்துவைத்தெனவும் அழைக்கின்ற தாயென்றதனால் அவ்வமுதத்தைக்கொடுக்க வேதம்விளக்குமென்பதுங் கொக்கிடந்தன.

இ-ம்-வேதம் இவ்வின்பத்தை நீக்குவான் பரவின்பத்தைக்கூறி யஃதுநீக்கிப்பின் னிச்சையுநீக்கிப் பரசுகமாகும்பொருட் டங்கனங் கூறினதென்பதாம். ௭௨

அ-கை-வேதம் போகபோக்கியங்களை யனுபவிக்க விதியாதென் பதற் குவமைகூறல்.

போகமாருயிர்கண்டதையுண்பதும் புணர்வதுமியல்பேகா
ணாகமங்களுஞ்சுபாவத்தைவிதிக்குமோவதனைத்தெரியாதோ
காகமேகருத்திடுநெருப்பேசுடு கசந்திடுவேம்பேநீ
வேகவாயுவேயசையெனவொருவரும் விதித்திடல்வேண்டா

இ-ள். போகமாருயிர் போகத்தைப்புசிக்கின்ற சீவர்களுக்கு-கண்டதைப் பார்த்ததை, உண்பதும்-அருந்தலும், புணர்வதும்-பொருந்தலும் இயல்பேகாண்-சுபாவமேயாம், ஆகமங்களும்-வேதங்களும்சுபாவத்தைவிதிக்குமோ சுபாவத்தை நியமிக்குமோ அதனைத்தெரியாதோ-அவ்வளவுதெரியாதா, காகமேகருத்திடு-காக்கையே நீகறுத்திடுவாய் நெருப்பேசுடு-அக்கினியேநீசுவாய்-வேம்பே-நிம்பமே, நீகசந்திடு- நீகசப்பாய் வேகவாயுவே-அதிகவேகமுள்ளகாற்றே அசையென-நீசலிப்பாயென்று ஒருவரும்-ஒருவரும், விதித்திடல் வேண்டாவே-நியமிக்கவேண்டுவதில்லை-எ-று.

விலங்குமெனப்பாடமன்று விதிக்குமென்பதேபாடமெனக்கொள்க

பா-ம். அறிவின்மையானுயிர்கட்கியல்பான அருந்தல்பொருந்தலென்னும் வாசனையை வேதம் விலக்குமேயன்றி விதிக்குமோவென்பார் போகமாருயிர்கண்டதையுண்பதும்புணர்வதுமியல்பேகாணாகமங்களுஞ் சுபாவத்தை விதிக்குமோ வெனக்கூறினார்.

இ-ம்-வேதம் போகபோக்கியமே பயனனகன்மத்தை விலக்கினதேயன்றி விதித்தன்றென்பதாம்.

அ-கை, கன்மகாண்டவாக்கியம்பூருவபட்சமென்பதற்கு துதிகூறல்

கள்ளுமீனுநீவிநம்பினோர்மகங்கள் காமத்தின்மனதாலுற்
கொள்ளுஞ்செண்டொடுகலவிசெய்யெனிலியங்குரைபெலாந்தொடா
வென்றே, கள்ளும்வேதத்தின்சம்மதஞ்சகலமுந்தவிர்வதேகருத்தாகு
ம்; விள்ளுமிவ்விதியென்னெனிற்பூருவநியாயமாம்விதியன்றே.

இ-ள். கள்ளுமீனும்-மதுவையுமாமிசத்தையும் மேவிநயப்பினுக்-நீயுண்ணவிச்சித்தால மக்கள்செய்-பாகங்களைச்செய்துபுசிப்பாய்காமத்தின்மனதால் காமவேட்கையுண்டானால்கொள்ளும் பெண்டோ விவாகஞ்செய்யுமனைவியோடும் கலவிசெய்வோயில் புணர்ச்சி செய்வாயென்றால் இவை-இக்காமி, குறையெலாங்கொடாதென்று - மற்றவைகளைத்துத் தீண்டாதென்று கள்ளும்-மீக்கும் வேதத்தின்சம்மதம்-வேதத்தினுடையசம்மதமானது சகலமுந்தவிர்வதே அனைத்துநீங்குவதேகருத்தாகும்-அபிப்பிராயமாகும் விள்ளுமிவ்விதி-சொல்லாநின்றவிக்கன் கொண்டவிதி பூருவபட்சமாக நியமித்தவிதியாம். ௭௫

அ-தை, இவ்விதி பூருவபட்சமென்பதை வற்புறுத்தல்.

மதுவிரைச்சிளுண்ணென்றசுருதியின் மணந்துபாரெனல்பாரா
புதுனவிச்சையும்புத்திரோற்பத்தியல்விநம்பென்றதுபாராப்
புதையும்விட்டொழி யதிபெட்டிகவந்தி இகழ்ச்சியற்றதும்பாரா
யதையறிந்துகன்மிங்களாசைகளொழிந்தானந்தமடைவாயே.

இ-ள் மதுவிரைச்சிகள்-மதுமாமிசங்களை உண்ணென்றசுருதிபுகியென்றவேதமானது பின்-பின்பு மணந்துபாரெனில்பாராய் ஆக்கிரணஞ்செய்தாற்போதுமென்பதைப் பார்மிதுனவிச்சையும் மனைவியோடு புணர்ச்சியின்பமும்புத்திரோற்பத்தியாமல்-மகப்பேருண்டாம்பெருட்டுவிரும்பென்றவிதிபாராய்-இச்சிரப்பாரென்றவிதியைப்பார் இதையும்விட்டொழி-இவ்விதியையும்விட்டொழிந்த யதி-சந்நியாசிக்குநயட்டிகவன்னிக்கு நைஷ்டிகப்பிரமசாரிக்கும் இகழ்ச்சியற்றதும் பாராய்சித்தையிவலாததும்பார் அதையறிந்து- அக்கருத்தையுணர்ந்துகன்மங்கள் கன்மங்களின்மேல்தபத்தைஆசைகளொழிந்துஇச்சைகள்நீங்கிஆனந்தமடைவாய்-ஞானத்தினாற் பிரமானந்தத்தையடைவாய்-எ-று

ப-ம்; இல்லறன்மஞ்செய்யா தமயாற்றுவிக்கும் பிரமசாரிதனக்குமிழிவின்மையைப் பாரென்றார்பதிநயிட்டிகவன்னிக் இகழ்ச்சியற்றதும் பாராயெனக்கூறினர்.

இ-உ-க-ம், வேதங் கன்மகாண்டத்திற்கூறும்வன்னாச்சிரமதன்மங்கள் அதனாலுண்டாகும்போகவின்பங்களனைத்தும்பின்துன்பங்களாகவருந்துதலைக்கண்டு வற்றைவிடுவதும் பரமசுகத்தை தேடவேண்டுமென்பதுதனப்பிராயமாதலா லிவற்றையொழித்துச் சுகத்தைதேடல்வேண்டுமென்பதாம். ௭௬

அ-தை, முற்கூறியவண்ணம் ஞானமஞ்ஞானத்துக்குச்சத்துருவாயினைத்திக்கோடுஞ்சேர்ந்தொரு தொழிலைச்செய்பலாமோவெனவினாதல்

உலகமானவஞ்ஞானமுங்கருமமு முறவென்றவழிகூடும்
பலவுமானவஞ்ஞானமுஞானமும் பகையென்பதுளதாகு
னிலவிலேமையுப்போலவஞ்ஞானமு நிமலஞானத்தோடே
குலவிநின்றிந்தச்சிருட்டிகள்செய்யவுங் கூடுமோகுருமூர்த்தி.

இ-ள் உலகமானவஞ்ஞானமுஞ்சகத்தாருகமானவறியாமையுங்கருமமும்-கன்மமும் உறவென்றவழிகூடும்-கூடுமென்றமார்க்கமொக்கும்பலவுமானவஞ்ஞானமும்-நானாவிதமானவஞ்ஞானமும்ஞானமுமேகமானஞானமும், பகையென்பது சத்துருவென்பது உளதானால்-உள்ளதானால் நிலவிலேமையுப்போல சந்திரனிடத்திற் களங்கமிருப்பதுபோலஅஞ்ஞானமும்-அஞ்ஞானமானது, நிமலஞானத்தோடு-களங்கமற்றஞானத்தோடு குலவிநின்று-சேர்ந்திருந்து குருமூர்த்தி-தேசிகரே இந்தச் சிருட்டிகள்செய்யவுங்கூடுமோ-இந்தச்சிருட்டியாதிகளைச் செய்யவுங்கூடுமோ-எ-று.

இ-ம் வெளிப்படை ௭௭

அ-கை அவ்வினாவிற்குத்தரங்கூறல்

சொரூபஞானமும்விருத்திஞானமுமென்று சோதிஞானமுமிரண்டாம்.
சொரூபஞானமேவிருத்திஞானமாய்த் தோன்றும்வேறலைமைந்தா
சொரூபஞானமஞ்ஞானசத்துருவென்று சுழுத்தியிற்கண்டாயோ
சொரூபஞானத்தின்மருவுமஞ்ஞானத்தைச்சுடும்விருத்தியின்ஞானம்

இ-ள். சோதிஞானமும்-சுயப்பிரகாசமானசைதன்னியமேசொரூபஞானமும்-சொரூபஞானமெனவும் விருத்திஞானமென்று விருத்திஞானமெனவும் இரண்டாம் இருவகையாம் சொரூபஞானமே சொரூபஞானமே விருத்திஞானமாய் - விருத்திஞானமாய் தோன்று தோன்றுமேயன்றி மைந்தா-மாணாக்கா வேறில்லை மற்றொன்றில்லையாம் சொரூபஞானம் ஸ்வரூ ஞானமானது அஞ்ஞானசத்துருவென்று அஞ்ஞானத்துக்குப் பகையென்று சுழுத்தியில்கண்டாய் சுழுத்தியவத்தையிற்பார்த்தாய் சொரூபஞானத்தின் மருவும் ஸ்வரூப ஞானத்திற் கூடியிருந்த அஞ்ஞானத்தை அறியாமையைவிருத்தியின்ஞானம் சமாதியிலுதித்தவிருத்திஞானமானதுசுடும் எரிக்கும் எ-று.

ப-ம். சுத்தசைதன்னியமென்பார்சோதிஞானமெனவும்பரஞானமென்பார்சொரூபஞானமெனவும்விசாதஞானமென்பார்விருத்திஞானமெனவும் சுழுத்தியிலறிவின்மையின்வசமாகாமற்றூறறிவாகவிருந்ததெதிரிட்டுக்கொண்கின்றதென்பார் சொரூபஞானமஞ்ஞானத்துருவெ

ன் று சுழுத்தியிற்கண்டாயே யெனவும் சமாதியிலுதயமான விவ்வறிவி லஞ்ஞானநசிக்குமென்பார் சொரூபஞானத்தின் மருவுமஞ்ஞானத்தைச்சுமெய்வு நத்தியின் ஞானமெனவுங்கூறினர்.

இ-ம ஆசமசங்கற்பமான வறிவிற்குண்டானவறியாமை யவ்வளவிலுதயமான வனுபூதியினாற் கெடுமென்பதாம். எறி

அ-கை காரணத்தாற்கெடாதவஞ்ஞானங் காரியத்தாலெக்கனங்கெடுமென்றவினாவிற்குத்தரம்.

அருத்திமாயையைச்சுழுத்தியிற் சுடாததுசொரூபஞானந்தானே
விருத்திஞானமாய்ச் சுட்டதெப்படியெனில் வெய்யிலாலுலகெங்
பரித்தசூரியசூரியகாந்தத்திற் பற்றியக்கினியாகி [கும்
எரித்தவாறுபோற்சமாதியில்விருத்தியாலெரிக்குமென்றறிவாயே

இ-ள். அருத்திமாயையை-சடமாகியவஞ்ஞானத்தைசுழுத்தியில் சுழுத்தியவத்தையில்சுடாததுகொடுக்காததானசொருபஞானந்தானே சொரூபஞானமே விருத்திஞானமாய்விருத்திஞானரூபமாய்கட்டதெங்கும் சகத்திலெவ்விடத்தும் பரிகத-வியாபித்தவெய்யிலால்ஊங்கணகிரணத்தினலெரிக்காமல் சூரியகாந்தத்திற்பற்றிசூரியகாந்தக்கல்லிற்பற்றி அக்கினியாகி-வன்னிஸ்ரூபமாய் எரித்தவாறுபோல் சகலவஸ்துக்களையுந்தகினியாகிதன்மையைப்போல் சமாதியின்நிஷ்டையின்கணுதிக்கும் விருத்தியால்பூரணவிருத்திஞானத்தினுல் எரிக்குமென்றறிவாய் திரிசியரூபமானவஞ்ஞானத்தைக்கெடுக்குமென்றுணர்வாய்-எ-று.

இ-ம் காரணமானகிரணத்தாற்கெடாதபொருள்காரியமானவக்கினியாற்கெடுவதுபோலசொரூபஞானத்தாற்கெடாதவஞ்ஞானமதிலுதயமானபூரணவிருத்திஞானத்தாற்கெடுமென்பதாம் எகூ

அ-கை விருத்திஞான மந்தக்கரணகாரிய மாதலி னதைக்கருமமெனப்படாதோவென்னுவினதல்.

அருளுமையனேதிரிவிதகரணத்தாலாகியதொழிலெல்லாங்
கருமமல்லவோவிருத்தியஞ்ஞானமுமந்தக்கரணகாரியமன்றோ
வுரியகன்மஞ்ஞானத்தைக்கெடுக்குமென்றோதினுலாகாரோ
பெரியஞானமென்றதற்கொரு பேரிட்டபெருமையுரையீரே.

இ-ள். அருளுமையனே அனுக்கிரகஞ்செய்யாநின்றவெண்ணரகிரியரேதிரிவிதகரணத்தால் - மனம்வாக்குகாயமென்கிற மூக்கரங்களால்ஆகியதொழிலெல்லாம் உண்டான கிரியைகளனைத்தும் கருமமல்லவே கன்மமல்லவா விருத்தி ஞானமும் பூரண விருத்தி ஞானமும் அந்தக் கரண காரிய மன்றோ அந்தக் கரணத்தின் காரிய மன்

